இப்பொழுது
திரளான ஜனங்கள்
கண்டு களிக்கின்றனர்

சித்ரா
மஹாராணி




ராகினியான்

# வீட்டுக்காரி

தமிழ்

டைரக்ஷன்
பி. புல்லையா

சாந்த குமாரி
நாராயணராவ்
லலிதா
பத்மினி
கிருஷ்ண வேணி
B.R. பந்துலு
B.N.R.

K.S. பிக்சர்ஸ் ரிலீஸ்

# டன்லப்

ஆர்.எஸ்.எஸ் ட்ரக் & பஸ் டயர்கள்

DUNLOP

## மைல்கள் முன்னேற்றம்!

அத்தாட்சி வேண்டுமா? அநேக மோட்டார் சொந்தக்காரர்களும் மற்றும் டயர் உபயோகிப்பவர் பலரும் வழங்கியுள்ள நற்சாட்சிப் பத்திரங்களை நீங்களே பரிசோதித்துப் பாருங்கள். அவை இப்போது ஒரு துண்டு பிரசுரத்தில் வெளியிடப்பட்டுள்ளன. எல்லா டன்லப் ஆபீஸ்களிலும் டயர் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.




**பெரியவை-கனமானவை-பத்திரமானவை.**

**லேடக்ஸ் இணைப்புள்ளவை.**

# MORTON..

மார்ட்டன்

இனிமையிலும்

இனிமையானது




**C. & E. MORTON (INDIA) LTD.**

MAKERS OF QUALITY CONFECTIONERY

INCLUDING

Cream Toffees, Fruit Centered Sweets, Barley Sugar
Lollies, Satin Confectionery, Peppermint-lozenges etc.

ASP.M.

தென்னிந்தியாவிற்கு சோல் ஏஜண்டுகள் :

மெஸர்ஸ். சௌத் இந்தியா கார்ப்பொரேஷன் (மதராஸ்) லிமிடெட்

80, செம்புதாஸ் தெரு, மதராஸ்




மலர் 10 இதழ் 21 | டிசம்பர் 24 | விக்ருதி ஞு மார்கழி 9உ



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.





மலர் 10 · கல்கி · இதழ் 21

# என்ன சேதி ?

## பூதத்துக்குப் பலி

"சாமியாவது? பூதமாவது?" என்று சொல்லப் படுவதைக் கேட்டிருக்கிறோம். "சுவாமி ஒருவர் உண்டு" என்பதை நம்மில் பெரும்பாலோர் நம்புகிறோம். அதைப் போலவே, பூதம் ஒன்று உண்டு என்பதிலும் சந்தேகம் இல்லை. அந்தப் பூதத்தின் மற்றொரு பெயர் குருட்டு நம்பிக்கை. எத்தனையோ உயிர்களைக் கொள்ளை கொள்ளும் பயங்கரமான ராட்சத பூதம் அது. அவ்வப்போது வெவ்வேறு ரூபங்களை எடுத்துக் கொள்ள வல்லது. சில சமயம் "நோய் தீர்க்கும் சஞ்சீவி"யின் ரூபத்தில் வந்து, முதலில் மக்களின் அறிவைக் கொள்ளை கொள்ளும்; பிறகு உயிர்களையும் பலி கொள்ளும். சமீபத்தில் அந்தப் பூதம் ஒரிஸ்ஸா மாகாணத்தில் தன் திருவிளையாடல்களைச் செய்தது. நேபாள பாபா என்னும் மாட்டுக்காரச் சிறுவன் மரப்பட்டை மருந்தைக் கொடுக்கிறான். அவன் கையினால் வாங்கிச் சாப்பிட்டால் தீராத வியாதிகளும் தீர்ந்து விடும் என்று வதந்தி பரவியது. ஊமை பேசுகிற சக்தியையும், குருடர் பார்க்கும் சக்தியும் பெறுகிறார்கள் என்று சொன்னார்கள். உடனே, ஆயிரக் கணக்கான மக்கள் விழுந்தடித்துச் சென்று அந்தப் பையனிடம் மருந்து வாங்கிச் சாப்பிட ஆரம்பித்தார்கள். இதனுடைய முடிவான பலன் என்ன? காலரா நோய் பரவி நூற்றுக்கணக்கான மக்கள் இறந்து போனார்கள். காலராவினால் செத்துப் போய்ச் சாலை ஓரங்களிலும் ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரங்களிலும் பிணமாய்க் கிடந்தவர்களைக் கண்ணெதிரே காண முடிந்தது. இதையெல்லாம் அறிந்த பிறகு என்ன தோன்றுகிறது? "இத்தகைய மடமை என்னும் வியாதிக்கு மருந்து கொடுப்பார் யாரும் இல்லையா?" என்று தான் கதறத் தோன்றுகிறது.

நம் நாட்டில் கடவுளைப் பிரத்யட்சமாய்க் கண்ட மகான்கள் அவதரித்திருக்கிறார்கள். நம் காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், சுவாமி விவேகானந்தர், ரமண ரிஷிகள், அரவிந்த முனிவர்,—முதலியோர் தோன்றியிருக்கிறார்கள். அவர்களில் யாரும் அதிசய மருந்து கொடுத்து மக்களின் வியாதியைக் குணப்படுத்த முன்வரவில்லை. காந்தி மஹாத்மாவும் அப்படிச் செய்யவில்லை; செய்ய முடியும் என்று சொல்லவும் இல்லை. மேலே கூறிய மகான்கள் எல்லாரும் தாங்களே பற்பல நோய்களுக்கு உள்ளானார்கள்; கஷ்டப்பட்டார்கள்; சிகிச்சையும் செய்து கொண்டார்கள். அப்படியிருக்கும் போது யாரோ ஒரு சிறுவனுக்கு அத்தகைய அதிசய சக்தி வந்து விட்டது என்று சொல்கிறவர்கள் சொன்னாலும், கேட்கிறவர்களின் புத்தி எங்கே போயிருந்தது? ஆடுகளுக்காவது இதைக் காட்டிலும் கொஞ்சம் அதிக அறிவு இருந்திருக்குமே? இத்தகைய மௌடீக சம்பவம் இது ஒன்று தான் என்று சொல்வதற்கில்லை. இத்தகைய ஏமாற்று வேலைகள் பல நடைபெறுகின்றன. நிலைமை விபரீதமாகப் போன பிறகுதான் வெளியில் தெரிகிறது. திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உள்ள சமயபுரத்தில் ஒரு சாமியாரிடம் ஜலம் வாங்கிச் சாப்பிட்டால் தீராதவியாதியெல்லாம் தீரும் என்றார்கள். கூட்டம் கூட்டமாய் ஆட்டு மந்தைகளைப் போல் மக்கள் போய் விழுந்தார்கள். முடிவில் என்ன ஆயிற்று? ஒரு தினம் சாமியாரிடம் ஜலம் வாங்கிச் சாப்பிட்டவர்களுக்கெல்லாம் காலரா வந்துவிட்டது! ஜலம் கொடுத்த சாமியாருக்கும் காலரா வந்து, அவரும் இறந்தார்! பிறகு தான் மேற்படி ஏமாற்று நின்றது! இம்மாதிரி காலராவிலோ வேறு விபரீதத்திலோ முடிகின்ற வரையில், குருட்டு நம்பிக்கை என்னும் பூதத்தின் வேட்டை நடந்து கொண்டேயிருக்கிறது. சில சமயம் 'படித்தவர்கள்' என்று சொல்லிக் கொள்கிறவர்களும் இந்தப் பூதத்துக்குப் பலியாகிறார்கள்! இந்தப் பூதம் 'நோய் தீர்க்கும் சஞ்சீவி' உருவத்தைத் தவிர, வேறு பல கோர உருவங்களும் எடுத்துக் கொண்டு

பேயாட்டம் ஆடுகிறதைப் பார்க்கலாம். ஆனால் சிலர் பார்க்காமலே கண்ணை மூடிக்கொண்டு விடுகிறார்கள். வேறு சிலர் பார்த்தும் "நமக்கென்ன?" என்று போகிறார்கள். இன்னும் சிலர் அந்தக் குருட்டு நம்பிக்கை பூதத்தைக் கொண்டு லாபம் சம்பாதிக்கவும் பார்க்கிறார்கள். பத்திரிகைகளும் மேற்படி வலையில் விழுந்து விடுகின்றன. சுதந்திர இந்தியாவில் இத்தகைய குருட்டு நம்பிக்கை பூதத்தை ஒழித்துக் கட்ட வேண்டியது சமூகத் தலைவர்களின் முதன்மையான கடமையாகும். சர்க்காரும் அதில் கவனம் செலுத்துவது அவசியம். ஒரிஸ்ஸாவில் நடந்ததுபோல் விபரீதம் நேரும் வரையில் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது.

# இவர் நல்லவர்—ஆனால், பொல்லாதவர்!

ஒரே மனிதர் நல்லவராயும் பொல்லாதவராயும் இருக்க முடியுமா!—முடியும் என்பதை இதோ நம் அட்டைப் படத்தில் விளங்கும் மாயூரம் உயர்தரப் பாடசாலைத் தலைமை ஆசிரியர் நிரூபித்துக்கொண்டு வருகிறார்.

"ஆற்றோடு போனாலும் போவேனே; பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லித்தர முடியாது!" என்று சொன்னவன் கதை நேயர்களுக்கு நினைவிருக்கலாம். பள்ளிக்கூட உபாத்தியாயர் உத்தியோகம் அவ்வளவு கஷ்டமானது. அதிலும் ஹெட் மாஸ்டர் வேலை மிகப் பொறுப்புடனே கஷ்டமும் நிறைந்தது. ஒரு முனிசிபல் ஹை ஸ்கூலின் தலைமை ஆசிரியரா யிருப்பதைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்!

பள்ளிக்கூட வாத்தியார், முக்கியமாகத் தலைமை ஆசிரியர், ஏக காலத்தில் நல்லவராயுமிருக்க வேண்டும்; பொல்லாதவராயுமிருக்க வேண்டும். அப்போதுதான் வெற்றிகரமாக உத்தியோகம் பார்க்க முடியும்.

பிள்ளைகளின் பெற்றோர்களுக்கு "வாத்தியார் நல்லவர்" என்று சொன்னால், பிடிக்கவே பிடிக்காது. "பாவம்! வாத்தியார் ரொம்ப நல்லவர்; பிள்ளைகள் அவரை ஏய்த்துவிடுகிறார்கள். படிப்பு எப்படி வரும்! பரீட்சை எப்படித் தேறும்!" என்று சொல்லுவார்கள்.

பிள்ளைகளோ, "பொல்லாத வாத்தியார்" என்றால், கதிகலங்கிப் போவார்கள்; அல்லது முரண்டு பிடித்து நிற்பார்கள். படிப்பும் வராது; பரீட்சையும் தேறாது. "நல்ல வாத்தியார்" என்று பிள்ளைகள் எண்ணினால் தான் அவர்களுக்கு மரியாதையும் அன்பும் ஏற்படும். மரியாதையும் அன்பும் உள்ள இடத்திலேயே படிப்பும் நன்றாக வரும்.

மாயூரம் ஹை ஸ்கூலின் தலைமை ஆசிரியர் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி ஐயர் இவ்வாறு பிள்ளைகளிடம் "நல்லவர்" என்றும், பெற்றோர்களிடம் "பொல்லாத வாத்தியார்! நன்றாய்ச் சொல்லிக் கொடுக்கிறார்!" என்றும் பெயர் பெற்றவர். ஆகையினால், அவருடைய தலைமையில் நடக்கும் பள்ளிக்கூடம் இந்த மாகாணத்திலேயே இணையில்லாதது என்ற புகழ் பெற்றிருக்கிறது. இவருக்கு முன்னால் ஸ்ரீ ராகவய்யங்கார் தலைமை ஆசிரியரா யிருந்தபோது மாயூரம் ஹைஸ்கூலுக்கு ஏற்பட்ட கீர்த்தி இன்றளவும் நிலை பெற்றிருக்கிறது.

சென்னை மாகாணத்தில் நூறு பிள்ளைகளுக்கு மேல் எஸ். எஸ். எல். ஸி. வகுப்பில் படிக்கும் பெரிய பள்ளிக்கூடங்களை யெல்லாம் எடுத்துக் கொண்டு பார்த்தால், சென்ற ஐந்து வருஷ காலமாகச் சேர்ந்தாற்போல் மாயூரம் ஹை ஸ்கூல் பரீட்சைத் தேர்வில் முதன்மை ஸ்தானத்தை அடைந்து வருகிறது!

எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு மேற்படி பள்ளிக்கூடத்திலிருந்து போகும் பிள்ளைகளில் சுமார் 100-க்கு 85 பேர் வீதம் தேறி விடுகிறார்கள்! சில வருஷம் 100-க்கு 90 பேருக்கு மேலேயே தேறி விடுகிறார்கள்!

இதற்குக் காரணம், மாயூரத்தின் வழியாகச் செல்லும் காவேரி நதியின் வண்டல் தண்ணீர் என்று சொல்லப்பட்ட காலம் உண்டு. இப்போதோ வண்டல் எல்லாம் மேட்டூரிலேயே தங்கி விடுகிறது! காவேரியில் தெளிந்த தண்ணீர்தான் வருகிறது.

ஆகவே, காவேரித் தண்ணீரின் மகிமையைத் தவிர, ஹெட்மாஸ்டர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஐயரின் திறமையும் சேர்ந்தே இவ்வளவு நல்ல பலன் கிட்டுகிறது என்று சொல்லலாம். மெக்காலே துரை வகுத்த அற்புதமான கல்வி முறையையும், அதை நடத்திவைக்கும் கல்வி இலாகா அதிகாரிகளையும், பாடத்திட்டம் அமைக்கும் மகானுபாவர்களையும், இவர்களுக்கெல்லாம் மேலாகப் பரீட்சைக்குத் தாள்களைத் தயாரிக்கும் புண்ணிய புருஷர்களையும் தாண்டி மாணவர்களை 90 சதவிகிதம் ஆண்டு தோறும் பரீட்சை தேறும்படி செய்துவரும் திறமைசாலியை எவ்வளவு பாராட்டினாலும் மிகையாகாதல்லவா!

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஐயர் ஹெட்மாஸ்டர் பதவி வகிப்பதோடு, ஹாஸ்டல் வார்டனாகவும் இருந்து நன்றாக நிர்வாகம் செய்து அதையும் மாகாணத்தில் உள்ள ஹாஸ்டல்களில் முதன்மையாகச் செய்திருக்கிறார். இன்னும் பல பொதுநல ஸ்தாபனங்களுடன் தொடர்பு கொண்டிருக்கிறார். தஞ்சை ஜில்லா உபாத்தியாயர்களின் 'கில்டு'க்குத் தலைவர், தஞ்சை ஜில்லா ஹெட்மாஸ்டர் சங்கத்தின் காரியதரிசி. கலை அன்பர்; சிறந்த ரஸிகர்; நாடக ஆசிரியர். அவர் எழுதிய 'சேவாசங்கம்' 'கிராம முன்னேற்றம்' முதலிய நாடகங்கள் மாயூரம் ஹைஸ்கூல் மாணவர்களாலேயே நடிக்கப் பெற்றுப் பெரிதும் பாராட்டப்பட்டவை.

பழங்கால குருகுல தர்மத்தின் உயர்ந்த பண்புகளையெல்லாம் பெற்று விளங்கும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஐயர் பி.ஏ., எல்.டி. அவர்கள் இன்னும் பலகாலம் கல்விக்குத் தொண்டாற்றி "ஆயிரமானாலும் மாயூரம் ஆகுமா!" என்னும் பழமொழியை நிலைநாட்டி வருவார் என்று நம்புகிறோம்.

# அக்கப் போர்

"சென்னை பலதார மணத்தடை சட்டத்தை எதிர்த்து ஒருவர் மனு செய்து கொண்டிருக்கிறார்." —செய்தி

பலதார மணம் மக்கள் ஜீவாதார உரிமை என்பதற்குப் பல ஆதார உதாரணங்கள் அவர் காட்டுவார் என்பது நிச்சயம்.

★

"சிறைகள் சிலவற்றில் ரேடியோ செட்டுகள் வைக்கப் பட்டுள்ளன. சென்னை ராஜ்யத்துச் சிறை ஒன்றிலிருந்து நான்கு கைதிகள் கம்பி நீட்டி விட்டனர்." —இரண்டு செய்திகள்

இந்த இரண்டு செய்திகளும் ஒன்றை ஒன்று காரண காரியமாகப் பின்பற்றி இருக்கும் அழகைக் கவனித்தீர்களா!

★

"ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் சகலவிதமான வியாதிகளும் தீருவதற்கு விபூதி தருகிறாராம்." —செய்தி

உன் நாட்டு ஸ்டேஷன்களுக்கு ஒழுங்காக டிக்கட் கொடுத்தால் போதாதா!

★

"கொரியா வியாதிக்கு புது மருந்து, டாக்டர் இஸ்ரேலின் புதுத் திட்டம்." —செய்தித் தலைப்புகள்

டாக்டர் இஸ்ரேலின் புதுத்திட்ட மருந்தும் பலனளிக்காவிட்டால் நேபாள பாபாவிடம் மருந்து வாங்கிக் கொடுத்துப் பார்க்கட்டும்!

★

"சென்னை ஜவுளி வியாபார குமாஸ்தாக்கள் சங்கத்தின் கூட்டம் ஒன்று நடந்தது." —ஒரு செய்தி

கூட்டத்தின்போது சங்கத்தின் அங்கத்தினர்கள் தங்கள் பேச்சுகளை அளந்தே பேசியிருப்பார்கள் என்பது நிச்சயம்.

★

"சுப்ரீம் கோர்ட் புது டில்லியில் கூடி நீதி வழங்குவதோடு நில்லாமல் நாடு முழுதும் பல இடங்களில் சுற்றிவர ஏற்பாடு செய்யவேண்டும்" என்கிறாராம் ஒரு மாஜி நீதிபதி.

'சுப்ரீம் கோர்ட்' என்ற பெயர் மாறி 'டூரிங் கோர்ட்' என்றல்லவா அது அப்பொழுது அழைக்கப்படும் என்று கேட்கிறார் ஒரு டூரிங் சினிமா தியேட்டர் முதலாளி!

★

"கொரியா போர் தளபதி மக் ஆர்தரைப் பதவியிலிருந்து விலக்க முயல்வதாக மக் அக்கிஸன்மீது இரண்டு வாரங்களுக்கு முன்பே செனேட்டர்கள் குற்றம் சாட்டினார்கள்." —வாஷிங்டன் செய்தி.

இப்பொழுது அதே செனேட்டர்கள் மக் அக்கிஸன்மீது இன்னமும் மக் ஆர்தரைப் பதவியில் வைத்திருப்பதற்காகக் குற்றம் சாட்டினால் நாம் ஆச்சரியப் படுவதற்கில்லை.

"இன்னும் இரண்டரை வருஷ காலத்தில் நாடு முழுதும் கல்வி பரவி விடும்." —ஒரு கல்வி டைரெக்டர்.

கல்வியானது அவ்வளவு சீக்கிரம் நாடு முழுவதும் பரவுவதற்கு அது என்ன தொத்து வியாதியா என்று கேட்கிறார் ஒரு சுகாதார இன்ஸ்பெக்டர்.

★

"ஈயச் சுரங்க கோஷ்டியை மலாயா கலகக்காரர்கள் தாக்கினார்கள். இருவர் மாண்டனர். பலருக்குக் காயம்." —சிங்கப்பூர் செய்தி.

இந்தச் சுரங்கக்காரர்களுக்கு கலகக்காரர்கள் கையில் சிக்காமல் ஓடி ஒளிவதற்கேற்ற சுரங்க வழி ஏதும் கிடைக்கவில்லையா!

---

## அகில உலக சிறு கதைப் போட்டி

மேற்படி போட்டிக்காக வந்த தமிழ்க் கதைகளில் அகில இந்தியப் போட்டிக்கு அனுப்பத் தகுதியானவை என்று கீழ்க்கண்ட நான்கு கதைகளும் தேர்ந்தெடுக்கப் பட்டன.

1. **ஊசியும் உணர்வும்**
   ஸ்ரீமதி ராஜம் கிருஷ்ணன், c/o. எலக்டிரிகல் சூபர்வைஸர், கவர்ன்மெண்ட் ஹவுஸ், உதகமண்டலம்.
2. **மனக்குரங்கு**
   ஸ்ரீ நா சீ. வரதராஜன், 28, அக்ரகாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை
3. **காதல் இதயம்**
   ஸ்ரீமதி இந்திராதேவி. 3, மன்றோ வில்லாஸ், சட்டாக் - 3.
4. **பூக்காரி**
   ஸ்ரீ சுவாமிநாத ஆத்ரேயன், "லலிதா மஹால்", ராஜா தெரு, தஞ்சை.

மேற்கூறிய நான்கு கதைகளும் புது டில்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகைக்கு அனுப்பப்பட்டுள்ளன. போட்டிக்கு வந்த கதைகளைப் பரிசீலனை செய்து மேற்படி நான்கு கதைகளையும் தேர்ந்தெடுத்த நீதிபதிகள் :—

1. பேராசிரியர் கே. சுவாமிநாதன்
2. பேராசிரியர் அ. சீனிவாசராகவன்
3. ஸ்ரீ ம. ப. பெரியசாமித் தூரன்

குறிப்பு :—மேற்படி நான்கு கதைகளைத் தவிர, மற்றும் போட்டிக்கு வந்த கதைகளில் தபால் தலை வைக்கப்பட்டிருந்த கதைகள் எல்லாம் இரண்டு வாரத்துக்குள் விலாசதாரர்களுக்குத் திருப்பி அனுப்பப்படும். — ஆசிரியர்.

# அமரர் சர்தார்.


1915-வரை ஆங்கில மோகத்தில் மூழ்கிய வக்கீலாக வாழ்ந்த படேல்,


1916-ல் மகாத்மாவின் பேரொளியைக் கண்டு கண் திறக்கப் பெற்றார்-


1928—
பர்தோலி இயக்கத்தைத் திறம்பட நடத்தி, விவசாயிகளின் இன்னல்களை பேரளவு நீக்கினர்.
விவசாயிகள்
பர்தோலி


1930-47
சுதந்திரம்
காந்தி மகான் நடத்திய சத்தியாக்கிரகப் போராட்டத்தில் சாரதியாக இருந்து இயக்கத்தைச் சுதந்திரப் பாதையில் செலுத்தினர்—
காங்கிரஸ்


1947–50
பொதுஜனத் தொண்டு
தேசம் சுதந்திரமடைந்த பிறகு— அதிகார வர்க்கத்தைத் தேச நலனுக்கு உழைக்கச் செய்யும் பணியையும்.....
அதிகார வர்க்கம்


...வகுப்புவாதப் புலியை வீழ்த்தும் வேலையையும்..


..சுதேச சமஸ்தானதிபதிகளைப் பணிய வைக்கும் வேலையையும் முடித்துவிட்டு...
சுதேச ராஜாக்கள்




..டிசம்பர் 15ல் தேசம் துயரத்தில் மூழ்க, அமரரானார்.!

# நாடு வெறிச்சோடியது!

வீட்டிலும், குடும்பத்திலும், சிலர் நடுநாயகமான நிலைமை அடைந்து விடுகிறார்கள். வீட்டுக்கு அவர்கள் இன்றி யமையாதவர்களாய்ப் போய் விடுகிறார்கள். அவர்கள் இருக்கும் போது வீடு களையாயிருக்கிறது; கலகலப்பாயிருக்கிறது. அவர்கள் எங்கேயாவது அசலூருக்குப் போய்விட்டால், "வீடு வெறிச்சோடி விட்டது!" என்று சொல்லுகிறோம்.

பாரத நாட்டுக்கே அம்மாதிரி நடுநாயகமாகி யிருந்து வந்தவர் வானுலகம் புகுந்து விட்டார்; ஆகையால் இன்று இந்நாடு வெறிச்சோடிக் கிடக்கிறது; பாரத பூமி களையிழந்து, கலகலப்பின்றிக் கிடக்கிறது.

நேற்று இருந்த ஒரே ஒரு மனிதர் தான் இன்று இல்லை; ஆயினும் சுற்று முற்றும் எங்கே பார்த்தாலும் ஒரே சூனியமாய்த் தோன்றுகிறது!

* * *

காலஞ்சென்ற தேச பக்தர் ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்கள் அடிக்கடி ஒன்று சொல்லுவதுண்டு. "இந்த நாட்டில் அடிமைகளாகப் பிறந்தோம்; ஆனால் இறக்கும்போது அடிமைகளாக இறக்கமாட்டோம்!" என்பார். இந்த வாக்கு, இந்தச் சபதம்—ஸ்ரீ சத்தியமூர்த்தியின் வாழ்க்கையில் நிறைவேற வில்லை. தீரர் சத்தியமூர்த்தியும், அவரைப் போலவே தேசபந்து தாஸ், பண்டித மோதிலால் நேரு, பால கங்காதர திலகர், வி. ஜே. படேல், வ. உ. சிதம்பரனார் முதலியவர்களும் அடிமை இந்தியாவின் விலங்கை உடைக்க முயன்று கொண்டே உயிர் துறந்தார்கள். அந்த வரிசையில் வந்த சில அதிர்ஷ்டசாலிகளுக்குத் தேசத்தின் அடிமை விலங்கு முறிவதைக் கண்ணால் பார்க்கவும் காதால் கேட்கவும் கொடுத்து வைத்திருந்தது. சுதந்திர இந்தியாவில் சில காலமாவது வாழ்ந்திருக்கும் பாக்கியத்தை அவர்கள் அடைந்தார்கள். அது மட்டுமா? இந்தியா தேசம் இமய மலையிலிருந்து கன்னியாகுமரி வரையில் ஒரே இராஜ்யமாகக் காட்சி யளிக்கும் அதிசயத்தையும் அந்தப் புண்ணிய புருஷர்கள் கண்டு களித்தார்கள்.

இப்படி ஐயாயிரம் வருஷத்துக் கனவு நனவாவதைப் பார்க்கக் கொடுத்து வைத்திருந்தவர்களில் சர்தார் வல்லபாய் படேல் இணையற்ற பாக்கிய சாலியாவார். பாரத நாட்டின் அடிமை விலங்கை உடைத்தெறியப் பாடுபட்ட தீரப் படையில் அவர் முன்னணியில் நின்றார். விலங்கு தகர்ந்து தேசம் சுதந்திரம் அடைவதைக் கண்ணாரக் கண்டார். ஆனால் தேசம் சுதந்திரம் அடைந்துவிட்டால் மட்டும் போதுமா?



அந்தச் சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ள சக்தி பெற வேண்டாமா? அத்தகைய சக்தி எப்படிக் கிடைக்கும்? தேசம் தனித் தனி அறுநூறு பிரிவுகளாகப் பிரிந்து நிற்கும்போது பெற்ற சுதந்திரத்தை எத்தனை காலம் பேணி வளர்க்க முடியும்? அந்த அறுநூறு பிளவுகளும் நீங்கித் தேசம் ஒற்றுமைப் படுவதைப் பார்க்கவும் சர்தார் படேலுக்குக் கொடுத்து வைத்திருந்தது. தம்முடைய திருக் கரங்களினாலேயே அந்த ஒப்பற்ற திருப்பணியைச் செய்யவும் அவருக்கு வாய்ப்புக் கிடைத்தது.

சுதந்திரம் என்னும் ஆரமுதம் நமக்குக் கிடைத்தபோது, அந்தச் சுதந்திரத்தை ஏந்திய கலசத்தில் அறுநூறு பொத்தல்கள் இருந்தன. எனவே, அமுதம் கிடைத்தும் பயன் படாது போய்விடுமோ என்ற பயம் ஏற்பட்டது. அந்த அறுநூறு ஓட்டைகளையும் அடைத்துச் சுதந்திர அமுதத்தை நமக்குச் சர்தார் வல்லபாய் காப்பாற்றிக் கொடுத்தார்.

வல்லபாயின் வாழ்க்கை பரிபூரணமான வாழ்க்கையாகும்; பூர்த்தி பெற்ற வாழ்க்கையாகும். "வாழ்க்கை எடுத்ததின் பயனைக் கண்டேன்; எடுத்த காரியம் யாவினும் வெற்றி கண்டேன்; வாழ்வின் இலட்சியம் பூரணமாய் நிறைவேறக் கண்டேன்; எவ்வித மனக் குறையும் இன்றி இம் மண்ணுலகை நீத்து விண்ணுலகம் செல்லுகிறேன்" என்று சொல்லிக் கொண்டு கண்ணை மூடும் பாக்கியம் இந்த உலகில் பிறந்த மனிதர்களுக்குள்ளே எத்தனை பேருக்குக் கிடைத்திருக்கிறது?

அலெக்ஸாண்டரையும் சீஸரையும் போல் எத்தனை பேர் எவ்வளவு பெரும் வெற்றிகளை அடைந்த பிறகும் கடைசியில் தங்கள் வாழ்க்கை பூர்த்தி பெறாமல் இறந்திருக்கிறார்கள்!

நெப்போலியனையும் ஹிட்லரையும் போன்ற எத்தனை பேர் தாங்கள் அடைந்த மகத்தான வெற்றிகள் தங்கள் கண் முன்னாலேயே சின்னாபின்னமாவதைப் பார்த்துவிட்டு மனமுடைந்து இறந்திருக்கிறார்கள்!

இவர்களுக்கெல்லாம் நேர்மாறான வாழ்க்கை சர்தார் வல்லபாயின் வாழ்க்கை. எடுத்த காரியத்திலெல்லாம் வெற்றி பெற்றார்; வாழ்க்கையின் இலட்சியங்களில் பூர்த்தி கண்டார். எந்த மக்களுக்காக உழைத்தாரோ அவர்களால் போற்றப்பட்டு உயிர் துறந்தார்; எந்த சகாக்களுடன் ஒத்துழைத்துப் பணி செய்தாரோ, அவர்கள் கண்ணீர் விட்டுக் கதறும்படியாகச் செய்துவிட்டு வானுலகம் சென்றார். இதைக் காட்டிலும் இந்த மண்ணுலகில் பிறந்தவர்கள் விரும்பக் கூடியது வேறு என்ன இருக்கிறது?

* * *

இந்தியா தேசத்தில் இதிகாச புராண காலம் முதல் ஐம்பத்தாறு ராஜ்யங்கள் இருந்து வந்திருக்கின்றன. சரித்திர காலத்தில் இந்தப் புண்ணிய பூமி பல நூறு இராஜ்யங்களாகப் பிளவுபட்டுக் கிடந்த காலமும் உண்டு. துஷ்யந்த மகாராஜாவின் புதல்வனாகிய பரதன் முதன் முதலில் இந்த நாட்டை





இமயம் முதல் குமரி வரையில் ஒன்று படுத்தி அரசு புரிந்தான். ஆகையால் இந்தத் தேசத்துக்குப் பாரத தேசம் என்று திருப்பெயர் ஏற்பட்டது. இன்று வரைக்கும் அந்தப் புனிதமான பெயரே வழங்கியும் வருகிறது.

ஆனால் நம்முடைய காலத்தில், நம் முடைய கண் முன்னால், அதே விதமான திருப்பணியைச் செய்து கொடுத் தவர் சர்தார் வல்லபாய் படேல். பிரிட்டிஷ் 'ஆதிக்யத்தி லிருந்து விடுதலை பெற்ற தேசத்தை ஒன்று படுத்திக் கொடுத்தவர் சர்தார் படேல். ஆகை யால் வருங் காலத்தில் இந்தத் தேசத்தை "வல்லப தேசம்" என்று அழைப்பது பொருத்த மற்றதாகாது. அல்லது தமிழ் முறையைப் பின் பற்றிப் "படேலகம்" என்று கூறுவதும் மிகை யாகாது.

சர்தார் வல்லபாய் காந்தி மகாத்மாவின் ஒப் பற்ற துணைவர்; ஜவா ஹர்லாலைக் கண்ணீர் பெருக்கிக் கலங்கச் செய்த துணைப் பிரதம மந்திரி; ராஜாஜியின் இணையில்லாத் தோழர்; பிரிட்டிஷ் சிங்கத்தின் பிடரியைப் பிடித்து ஆட்டி வைத்தவர்; ஏழைக் குடியானவர் களை 'இந்நாட்டு மன் னர்' ஆக்கியவர்; சுதந் திர இந்தியாவின் மக்க ளுக்குத் தாயாகவும் அர சாங்க அதிகாரிகளுக்குத் தந்தையாகவும் விளங்கி யவர்; தேச விடுதலைப் படையின் பிரதான சேனா திபதி; சுதந்திர இந்தி யாவில் சைன்யத்தின் உள்ளங் கவர்ந்த அதி பதி; முப்பது வருஷம் போலீஸ் இலாகாவைக் கதிகலங்க அடித்தவர்; மூன்று வருஷம் அதே போலீஸ் இலாகாவிலும் போற்றப்பட்டுத் தலை மை வகித்தவர்; இரும்பு மனிதர்; இனிய மனத் தினர்; குஜராத்தின் சிங்கம்; பார்டோலியின் ராஜா; இந்தி யாவின் முடிசூடா மன்னர்; காங் கிரஸின் சக்கரவர்த்தி;— இத்தகை யவர் இன்று விண்ணுலகம் சென்று விட்டார்! தேசம் வெறிச்சென்றிருப் பதில் வியப்பென்ன?

வாழ்ந்திருந்த வல்லபாய் படேல் என் றென்றும் தமது "வல்லப நாட்டு" மக்களின் உள்ளங்களில் வீற்றிருப்பார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

மகிழ்ச்சிதருவது...

# ஹிமாலயா புக்கே

## டாய்லட் பௌடரின்

## குளுமையான பரிமளம்

பரிமளத்தோடு கூடின, நேர்த்தியான
ஹிமாலயா புக்கே ஆதர்ச டாய்லட்
பௌடர், பட்டுப்போல் மிருதுவானது,
வேர்வையை உறிஞ்சுகிறது. உங்கள்
சருமத்திற்கு ஆறுதலளித்து சுகத்
தையும் தருகிறது. மேலும் மகிழ்ச்
சிதரும் நீடித்து நிற்கும் பரிமளம்
உங்களை வேலைநெருக்கடியான
நாள் முழுவதும் மலர்ச்சியுட
னும், கவர்ச்சியுடனும்
இருக்கச்செய்கிறது.




இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு

HBT. 4-172-55 TM

# உள்ளம் கவர்ந்தவன்

[ ஆசிரியர்: பிரேம்சந்த் ] [ மொழிபெயர்ப்பு: ரா. வி. ]

'ஸ்ரீ இருண்டம்' என்னும் பெயர் கொண்ட தடாகத்தில் மலர்ந்திருந்த தாமரைகள் இளவேனிற் காலத்தில் வீசும் இனிய தென்றல் காற்றின் அசைவுக் கேற்றவாறு ஆடி அசைந்து காலையிளஞ் சூரியனின் பொன்னிறக் கிரணங்களுக்கு முகமன் கூறி வரவேற்றுக் கொண்டிருந்தன. கதிரவனும் மலர்ந்த முகத்துடன் காதலியைக் காண மெதுவாக மேலே யறி வந்து கொண்டிருந்தான். ராஜகுமாரி பிரபா தடாகத்தின் கரையிலே பச்சைப்பசே லென்று வளர்ந்திருந்த பசும் புல் தரையில் நின்றுகொண்டு எழில் மிகுந்த பறவைகளின் கானத்தைக் கேட்டு ரசித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய பொன் மேனி பொற்றாமரை மலர்களைப் போலவே பிரகாசித்துக் கொண்டிருந்தது. கதிரவனின் கனக கிரணங்கள் மூலம் சிருஷ்டிக்கப்பட்ட அழகிற் சிறந்த உஷா தேவி தான் பெண் உருவம் எடுத்து அங்கு வந்து நின்று கொண்டிருக்கிறாளோ என்று எண்ணத் தோன்றியது.

பிரபா மகிழமரத்தின் கிளையொன்றில் உட்கார்ந்திருந்த ஷ்யாமா என்னும் பக்ஷியைப் பார்த்து விட்டு, "நானும் இம்மாதிரி ஒரு பறவையாகப் பிறந்திருக்கக் கூடாதா!" என்று உள்ளத்தின் எக்களிப்பை வாய் விட்டுக் கூறினாள்.

அதைக் கேட்ட அவள் தோழி உமா, "ஏன் இப்படி!" என்று கேட்டாள்.

பிரபா தடாகத்தைப் பார்த்து, "மரத்தின் பசுமை மிக்க கிளையொன்றில் உட்கார்ந்து நானும் கூவினால் என்னுடைய கானமும் இந்தத் தோட்டம் முழுவதும் எதிரொலித்துக் கொண்டிராதா!" என்று கேட்டாள்.

"நவகட்டின் ராணி இம்மாதிரி பறவைகளின் கானத்தை நினைத்த பொழுதெல்லாம் தான் கேட்கலாமே!" என்றாள் உமா கேலியாக.

பிரபா சற்று வெட்கிப் போய், "எனக்கு ஒன்றும் நவகட்டின் ராணியாக ஆகவேண்டும் என்ற ஆசையில்லை. எனக்கு கிராமானுஷ்யமான நதிக்கரை ஒன்று கிடைத்தால் போதும். ஒரு வீணையும், இம்மாதிரி அழகிற் சிறந்த பக்ஷிகளின் சகவாசமும் கிடைத்து விட்டால் அதையே நான் பெறுதற்கரிய பேறாக எண்ணுவேன். இன்னிசையில் எனக்கு உலகத்தின் சகல ஐசுவரியங்களும் நிரம்பியிருப்பதாகத் தோன்றுகிறது" என்றாள்.

பிரபாவுக்குச் சங்கீதத்தில் அபாரப் பிரேமை. அவள் அடிக்கடி இம்மாதிரியான சுக சொப்பனங்கள் கண்டு வந்தாள். உமா பதில் சொல்ல வாய்திறக்கும் பொழுது, வெளியிலிருந்து யாரோ பாடும் குரல் கேட்டது:—

உள்ளம் கவர்ந்து சென்றான்—கண்ணன்
உள்ளம் கவர்ந்து சென்றான்.

பிரபா அந்தப் பாட்டில் மனத்தைப் பறி கொடுத்தாள். "உமா, இந்தக் குரலில் தான் என்ன இனிமை! என்ன குழைவு! பார்த்தாயா! என்னால் இதைக் கேட்காமல் இருக்கமுடியாது போலிருக்கிறது. அவனை உள்ளே அழைத்து வா!" என்று உத்தர விட்டாள்.

அந்தப் பாட்டின் இனிமை உமாவின் உள்ளத்தையும் ஆட்கொண்டு அவளையும் மெய் மறக்கச் செய்து விட்டது. "நானும் இன்று வரை இம்மாதிரிப் பாட்டைக் கேட்டதில்லை. ஜன்னலைத் திறந்து கூப்பிடட்டுமா!" என்றாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பாடகன் அங்கே வந்தான். நல்ல அழகிய கட்டுக் கோப்பான சரீரம். தோளில் மான் தோல் தொங்கிக் கொண்டிருந்தது. காஷாய வஸ்திரம் உடலை அலங்கரித்துக் கொண்டிருந்தது. அவன் கையிலே ஒரு சிதார் வாத்தியம் இருந்தது. முகத்திலே அலாதி தேஜஸ் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவன் தலை குனிந்தவாறே தன் கடைக்கண்களால் அவ்விரு அழகிகளையும் பார்த்தான்.

பிரபாவும் தன் கா[illegible]ய கண்களால் அவனை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தாள். அதற்கு மேல் அவளால் அவனைப் பார்க்க முடியவில்லை. சட்டென்று தலையைக் குனிந்து கொண்டு விட்டாள். உமா யோகியைப் பார்த்து, "யோகி ராஜ்! தங்கள் தரிசனம் கிடைத்தது எங்கள் பெரும் பாக்கியம். தங்கள் பாட்டை நாங்கள் கேட்கலாமா!" என்று மிகவும் பணிவுடன் கேட்டாள்.

யோகி தலை குனிந்தபடியே, "நாங்களோ யோகிகள். யோகிகளுக்குப் பரந்தாமனைப் பஜிப்பதைத் தவிர வேறென்ன தெரியும்! உங்களைப் போன்ற ரசிக சிரோமணிகளான நாரீமணிகளின் எதிரே நாங்கள் என்ன பாட முடியும்! இருந்தாலும் என் பாட்டு உங்களுக்குப் பிடிக்கிற தென்றால் கேளுங்கள் :—

உள்ளம் கவர்ந்து சென்றான்—கண்ணன்
உள்ளம் கவர்ந்து சென்றான்.

யோகியின் இனிய பாவம் ததும்பும் குரலையும் சிதார் வாத்தியத்தின் குழைவு-நெளிவுகளையும் கேட்டுப் பிரபாவின் உள்ளம் உருகியது. அவள் தன்னையே மறந்தாள். சிதாரின் இனிய நாதம் காற்றில் கலந்து அலைகளாகப் பரிணமித்து எதிரொலித்தது போலவே, அந்தப் பாட்டு அவளுடைய உள்ளத்திலும் எண்ண அலைகளை எழுப்பி ஆட்டத் தொடங்கியது. உள்ளத்தின் ஆழத்தில் அடங்கிக் கிடந்த உணர்ச்சிகள் விழித்தெழுந்தன. இதயம் எண்ணற்ற இன்பக் கனவுகளைக் காண்பதில் லயித்தது. தடாகத்தில் மலர்ந்திருந்த தாமரைப் புஷ்பங்கள் கூட அப்ஸர ஸ்திரீகளாக உருவெடுத்து, கண்ணங் கரிய உருவம் படைத்த வண்டுகளிடம் கை கூப்பிக் கண்ணில் நீர் ததும்ப, 'உள்ளம் கவர்ந்து சென்றான்—கண்ணன்' என்று கூறத் தொடங்கி விட்டன! இளந் தளிர்களும் பசுந்தளிர்களும் நிறைந்த கிளை

களும் கூடத் தலைகுனிந்து, கூவிக்கொண்டிருந்த பட்சிகளிடம் விசித்து அழுதவாறே, 'உள்ளம் கவர்ந்து சென்றான்—கண்ணன்' என்று குறைகூறத் தொடங்கி விட்டன! பிரமையில் லயித்துவிட்ட பிரபாவின் உள்ளமும் சிதாரின் இனிய நாதத்துடன் கலந்து, 'உள்ளம் கவர்ந்து சென்றான்—கண்ணன்' என்று முணுமுணுக்கத் தொடங்கியது.

## 2

பிரபா மகோபி வாசியான ராவ் தேவி சந்திரரின் ஒரே பெண். ராவ் பண்டையப் பண்பாடுகளிலும் கோட்பாடுகளிலும் அதிகப் பற்றுக் கொண்டவர். கிருஷ்ண பரமாத்மாவின் பரம பக்தர். ஆகவே, வெகு தூரத்துக்கு அப்பாலிருந்து கூடப் பாடகர்களும் பக்தர்களும் அவருடைய தர்பாருக்கு வந்து ஏராளமான பரிசுகளும் வெகுமதிகளும் பெற்றுப் போவதுண்டு. ராவ்சாஹேபுக்குப் பாட்டு என்றால் உயிர். அவரே கூட ஒரு நல்ல பாடகர். மூப்பின் காரணமாகச் சாரீரம் உடைந்து பாடும் சக்தியை அவர் இழந்துவிட்ட பொழுதிலும் கானக் கலையின் நுணுக்கங்களை நன்கு உணர்ந்து அனுபவித்து வந்தார். பிரபா குழந்தைப் பருவத்திலிருந்தே இணைபிரியாமல் அவருடனேயே இருந்து வந்தாள். பூர்வஜன்ம வாசனையும் அல்லும் பகலும் பாட்டைப் பற்றிய பேச்சே அங்கு நடந்து வந்ததால் ஏற்பட்ட அநுபவ ஞானமும் சேர்ந்து அவளைக் கானக் கலையில் மிக்க ஈடுபாடு உள்ளவளாகச் செய்து விட்டன.

பின்னைப் பிராயத்தைத் தாண்டி அவள் யௌவனப் பிராயத்தை அடைந்துவிடவே, அவளுடைய கானக் கலையோடுகூட அழகைப் பற்றியும் எங்கு பார்த்தாலும் பேச்சு நடக்கலாயிற்று!

ராவ்சாஹேப் தம் பெண்ணை நவகட்டின் ராஜாவான ஹரிச்சந்திரருக்கு மணம் செய்து வைப்பதாகத் தீர்மானித்திருந்தார். இருதரப்பிலும் தடபுடலாக ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன.

ராஜா ஹரிச்சந்திரரோ ஆஜ்மீரில் உள்ள மேயோ காலேஜில் கல்வி பயின்றவர். புது நாகரிகத்தில் ஊறித் திளைத்தவர். அதன்பால் அதிக மோகங் கொண்டவர். ஆகவே, கல்யாணத்துக்கு முன்பு ஒரு தடவையாவது ராஜகுமாரி பிரபாவை நேரில் சந்தித்துப் பேச வேண்டும் என்று அவர் ஆசைப்பட்டார். ஆனால் ராவ்சாஹேபோ அந்த வழக்கத்தை அறவே வெறுப்பவர்.

ராஜா ஹரிச்சந்திரரின் இந்தப் புது போக்கையும் நாகரிகத்தையும் கண்டு பிரபா மிகவும் மனம் வெதும்பினாள். ஆனால் அன்பே உருவான யுவ சந்நியாசியைக் கண்டு அவன் பாட்டைக் கேட்டபின் அவளால் அவன் நினைவை மறக்கவே முடியவில்லை. உமா அவளுக்கு அந்தரங்கத் தோழி. இருவருக்கும் இடையே ஏதும் இரகசியம் கிடையாது. ஆனால் அந்த ரகசியத்தை மட்டும் ராஜகுமாரி பிரபா அவளிடம்கூட மறைத்து வந்தாள். உமா அவளுடைய சுபாவத்தை நன்கு அறிந்தவளாதலால் அவளுடைய மனப்போக்கை நன்கு அறிந்து கொண்டு விட்டாள். ஆனால் அவள் உபதேசம் செய்து அந்தத் தீயை வளர்க்க விரும்பவில்லை. கொஞ்ச நாட்கள் போனால் அந்தத் தீ தானாக அடங்கிவிடும் என்று அவள் எண்ணினாள். பொதுவாக இம்மாதிரி ஆசைகளின் முடிவெல்லாம் இப்படி ஆவது இயல்புதானே! ஆனால் அவளுடைய ஊகம் பொய்த்து விட்டது. யோகியின் மனமோகன உருவம் பிரபாவின் கண்களை விட்டு அகலவே இல்லை. அவனுடைய இனிய குரலோசை அவளுடைய காதுகளில் ரீங்காரம் செய்த வண்ணமே இருந்தது. அதே தடாகக் கரையில் அவள் தினமும் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவள் கற்பனைக் காதுகொண்டு இதயத்திலே இன்பத்தை அள்ளிச் சொரியும் அதே ராகத்தைக் கேட்பாள். கற்பனைக் கண் கொண்டு யோகியின் உள்ளங் கவரும் அதே உருவத்தைக் காண்பாள். சிற்சில சமயம் அவளுக்கு எங்கோ வெளியிலிருந்து அந்த ராகாலாபனம் வருவதுபோன்ற பிரமை ஏற்படும். உடனே அவள் துணுக்குற்று எழுந்து தோட்டத்தின் மதில் சுவர்வரை போவாள். பிறகு நம்பிக்கை இழந்து அங்கிருந்து திரும்பி வருவாள். பின்னர் ஒரு மரத்தடியில் கொடியாகச் சாய்ந்து நின்றுகொண்டு யோசனையில் ஆழ்ந்து விடுவாள்.

"என் உள்ளம் இப்படித் தடுமாறுவானேன்! நானோ ஹிந்துப் பெண். தாய்தந்தையர் என்னை யாருடைய கையில் ஒப்படைக்கிறார்களோ, அவருக்கு அடிமையாக இருக்க வேண்டியதுதானே என் கடமை! நான் கைப்பிடித்த கணவனுக்கு உடல், பொருள், ஆவி அனைத்தையும் சமர்ப்பணம் செய்யவேண்டும். அந்நிய புருஷனை மனதினால் நினைப்பது கூடப் பாவமாயிற்றே! ஐயோ! இப்படிக் களங்கமுற்ற உள்ளத்துடன் நான் கணவரிடம் எப்படிப் போவேன்! இந்தக் காதுகளினால் அவருடைய காதல் மொழிகளை எப்படிக் கேட்பேன்! அவருடைய அன்பு மொழிகள் எல்லாம் எனக்குச் சொல் அம்புகளாக அல்லவா தோன்றும்! இந்தப் பாவிக் கண்களால் அவருடைய அன்புக்கனிவான பார்வையை எப்படிக் காண்பேன்! அவருடைய அந்தப் பார்வை என் உள்ளத்தை இந்திரனின் வஜ்ராயுதம்போல் துளைக்க அல்லவா செய்யும்! இந்தக் கழுத்தில் அவருடைய அன்புக் கைகள் பட்டால் அவை எனக்கு இரும்புக் கைகளாக அல்லவா தோன்றும்! என் ஆருயிரே! நீங்கள்





என் உள்ளத்தை விட்டு வெளியேறிவிட மாட்டீர்களா! என் இதயபீடம் உங்களுக்கு உகந்ததல்ல. எனக்குமட்டும் கொஞ்சமாவது அதிகாரமும் உரிமையும் இருக்குமானால் உங்களுக்கு என் இதயத்தையே பஞ்சணை மெத்தையாக்கித் தருவேன். ஆனால் நான் தர்மம் என்னும் கட்டுப்பாட்டில் கட்டுண்டிருக்கிறேனே! என்னால் என்ன செய்ய முடியும்!

இவ்வாறு அவளுடைய உள்ளம் அலைபாயலாயிற்று. யோகியின் நினைவாகவே ஒரு மாதத்துக்குமேல் ஓடிவிட்டது. கல்யாணத்தேதியும் நெருங்கிவிட்டது. கல்யாணத் தேதி நெருங்க நெருங்கப் பிரபாவின் தாமரை முகம் வாட்டமுற்றது. விரகதாபமும் வேதனையும் தாளாமல் அவள் அந்தத் தடாகத்திலேயே விழுந்து உயிரை மாய்த்துக் கொண்டால் என்ன என்று கூடச் சிற்சில சமயம் எண்ணுவதுண்டு. ஆனால் தன் சோகத்தில் அப்பாவும் உயிரை விட்டு விட்டால் என்னவாகும் என்ற எண்ணம் எழுந்து அவள் மனத்தை மாற்றிவிடும்.

## 3

விவாகம் வெகு தடபுடலாக நடந்தது. ரவ்சாமேயப் பிரபாவை ஆலிங்கனம் செய்து ஆற்றமாட்டா வருத்தத்துடன் விடைகொடுத்தனுப்பினார். பிரபா கண்ணீரும் கம்பலையுமாக விடைபெற்றுக் கொண்டாள். அவளுக்கு உமாவைப் பிரியவே மனம் வரவில்லை.

நவகட் ஒரு பெரிய சமஸ்தானம். ராஜா மணிச்சந்திரரின் நல் ஆட்சியின் காரணமாக நல்ல நிலைமையில் இருந்தது. பிரபாவின் சொன்ன சொல் கேட்பதற்காகக் கணக்கற்ற அடிமைப் பெண்கள் இருந்தனர். அவள் வசிப்பதற்கென்று கட்டப்பட்ட மாளிகை கன ஜோராக ஜோடிக்கப்பட்டிருந்தது. அதை நிர்மாணித்த கைதேர்ந்த சிற்பிகளைப் புகழாமல் இருக்க முடியாது. அலங்கரிக்கும் கலையில் அநுபவம் வாய்ந்த பெண்கள் அவளை வெகு அழகாக அலங்கரித்து விட்டார்கள். ரஸிகரான ராஜா அந்தப்புரத்துக்கு வந்தார். பிரபா அவருக்குக் கைகூப்பித் தலை வணங்கினாள். அவளுடைய கண்களிலிருந்து நீர் ஆறாகப் பெருகியது. கணவர் அன்பு மயக்கத்தில் அவளுடைய முகத்தை மறைத்திருந்த திரையை விலக்கினார்.

வெளிச்சம் தரும் விளக்குத்தான்; ஆனால் அணைந்திருந்தது. நறுமணம் கமழும் புஷ்பம்தான்; ஆனால் வாடி வதங்கியிருந்தது. இருந்தாலும் மறு நாள் முதல் ராஜா வண்டுபோல க்ஷணத்துக்குக்ஷணம் அந்தப் புஷ்பத்தையே சுற்றி வட்டமிட்டு மொய்த்துக் கொண்டிருந்தார். அரசாங்கக் கவலையோ, அரண்மனையின் சிந்தனையோ அவருக்கு உண்டாகவில்லை. பிரபாவின் பேச்சிலே இனிமை தாண்டவமாடியது. அவள் பார்வை இன்பக் கடலெனத் திகழ்ந்தது. அவளுடைய மதிமுகம் ஆனந்தசாகரமாகக் காணப்பட்டது. காதலில் ராஜா மனதைப் பறிகொடுத்துவிட்டார். பாலில் ஈ விழுந்து கிடக்கிறது என்பது தெரிந்திருந்தால் தானே!

ராஜாவின் இனிமையான பேச்சும் அன்பு நிறைந்த சரஸ ஸல்லாபமும் பிரபாவின் உள்ளத்தில் பதியாமலோ, வேலை செய்யாமலோ இருக்க முடியுமா! அன்பின் ஒளி அந்தகாரம் நிறைந்த இதயத்தையும் பிரகாசிக்கச் செய்யும் சக்தி வாய்ந்ததல்லவா! பிரபா மனதுக்குள் மிகவும் நாணமுறுவாள். ராஜாவின் பரிசுத்தமான அன்புக்கு நாம் பாத்திரம் இல்லையோ என்று கூட எண்ணுவாள். அவருடைய பரிசுத்தமான காதலுக்குப் பதிலாக வெளிப்பகட்டான உணர்ச்சிகளை வெளியிட்டு ஏமாற்ற வேண்டியிருக்கிறதே என்று எண்ணி மிகவும் மனம் பொருமுவாள். ராஜா [illegible] தன்னுடன் இருக்கும் வரை கொடி போல அவரைச் சுற்றிக்கொண்டு காதல் உரையாடி மகிழ்விக்க முயலுவாள். அவள் அவருடன் நந்தவனத்துக்குச் சென்று உரையாடுவாள். மாலை கட்டி அவர் கழுத்தில் போட்டு, "ஸ்வாமி! இந்த மலர்கள் என்றென்றும் வாடாமலராகவே இருக்க வேண்டும். இவற்றை வாட விடக் கூடாது!" என்பாள்.

அவர் எதிரே அவள் சிரிப்பாள்; அவள் கண்கள் சிரிக்கும்; அவள் கண்களில் தீட்டப்பட்டிருக்கும் கரிய மை கூடச் சிரிக்கும். ஆனால் அந்தோ! அவள் தனிமையில் இருக்கும் பொழுதெல்லாம், அவளுடைய மனம் சிறகடித்துப் பறந்து சந்திரகுண்டம் என்னும் தடாகக் கரைக்கு அல்லவா சென்று விடும்! தடாகத்தின் நீல நிறத் தண்ணீரும் அதன் மீது மிதக்கும் செந்தாமரைகளும் வெண் தாமரைகளும், கரையிலிருக்கும் மகிழ மரத்தின் வரிசைகளும் அவள் கண்முன்னே காட்சி அளிக்கும். புன்னகை புரிந்தவண்ணம் தளர் நடை நடந்து தடாகத்தைச் சுற்றிச் சுற்றி வருவாள். அப்பொழுது இனிய சரீரம் உடைய யோகியின் பொன்மேனி அவள் கண்களில் குடி புகுந்து விடும். சிதாரின் இன்னிசை மிக்க நாதத்துடன் பாடிய 'உள்ளம் கவர்ந்து சென்றன் கண்ணன்' என்னும் பாட்டு காற்று வழியே மிதந்து அவள் காதில் வந்து புகும்.

## 4

பல மாதங்கள் ஓடிவிட்டன. ஒரு நாள் ராஜா மணிச்சந்திரர் தன் சித்திரசாலைக்குப்

பிரபாவை அழைத்துச் சென்றார். சித்திர சாலையின் நோட்டமே மனத்தை மாயா லோகத்துக்கே இழுத்துச் சென்றது. இதிகாச புருஷர்களும், புராண புருஷர்களும் ஒரு வரிசையில் இருந்தனர். சரித்திர நாயகர்கள் இன்னொரு வரிசையில் கம்பீரமே உருவாக நின்றனர்.

பிரபா ஒவ்வொரு படமாகப் பார்த்துக் கொண்டே சென்றாள். சித்திரக்காரர்களின் கைவண்ணத்தைக் காணக் காண அவளுக்குத் தெவிட்டவே இல்லை.

சித்திரசாலையின் ஒவ்வொரு படத்தையும் பார்வையிட்டுக் கொண்டே சென்ற பிரபா கொஞ்ச தூரம் சென்றதும் பாரத நாட்டுப் பழம் பெரும் கவிகள் கொலு வீற்றிருக்கும் இடத்தை அடைந்தாள். அந்த அந்தக் கவிஞர் களின் காவியங்கள் அவள் கற்பனைக் கண்களிலே தோன்றி மனத்தை மகிழ்வித்தன. அந்தக் கவிஞர்களின் கூடத்திலே, விசால இதயமும், அகன்ற உலக அநுபவமும் ஒருங்கே அமையப் பெற்ற ஈடு இணையற்ற கவிஞரான சூரதாசரும் வீற்றிருந்தார்.

பிரபாவுக்குச் சூரதாசரிடம் அளவு கடந்த பிரேமை. அந்தப் படத்துக் கெதிரே அவள் சென்று தன் வணக்கத்தை அந்த மாபெரும் கவிஞருக்குத் தெரிவிக்கும் பொருட்டுத் தலை குனிந்தாள். அந்தப் படத்துக்குப் பக்கத்திலேயே இன்னொரு சிறு படமும் இருந்தது. அந்தப் படத்திலுள்ள உருவமும் கவிஞருக்குத் தலை வணங்கித் தன் வணக்கத்தை தெரிவித்துக் கொண்டிருந்தது. பிரபா அதைப் பார்த்ததும் துணுக்குற்றாள். அவள் இதயத்திலே இடம் பெற்றிருந்த அதே யோகியின் படம்தான் அது! விழி குவிந்தவாறே பிரபா அந்தப் படத்தைக் கவனித்தாள். ராஜா ஹரிச்சந்திரர் இலேசாகச் சிரித்தவாறு, "இந்த மனிதனை நீ எங்கேயாவது பார்த்திருக்கிறாயா!" என்று கேட்டார்.

இந்தக் கேள்வியைக் கேட்டது தான் தாமதம்; பிரபாவுக்கு ஒரே பயமாகத் தூக்கி வாரிப்போட்டது. வேடனைக் கண்டு மான்குட்டி மிரள மிரள விழிக்குமே, அது போலப் பிரபா தன் அகன்ற நீண்ட விழிகளால் சுவரைப் பார்க்கலானாள். 'என்ன பதில் சொல்லுவது!' என்ற யோசனை அவளுடைய உள்ளத்தில் எழுந்தது. 'இந்த மனிதனை எங்கேயாவது பார்த்திருக்கிறாயா!' என்று இவர் கேட்டாரே! எங்கேயாவது என் உள் அந்தரங்கத்தை இவர் அறிந்து கொண்டிருப்பாரோ! கடவுளே! என்னைக் காப்பாற்றுவது உன் கையில் தான் இருக்கிறது. நான் எப்படி மறுத்துக் கூற முடியும்!— இந்தச் சிந்தனையில் அவளுடைய முகம் 'குப்' பென்று வெளுத்தது. தலையைக் குனிந்து கொண்டு மிகவும் மெல்லிய குரலில், "எங்கேயோ பார்த்திருப்பதாகத்தான் நினைவு வருகிறது!" என்றாள்.

"எங்கே பார்த்திருக்கிறாய்?" என்று கேட்டார் ராஜா ஹரிச்சந்திரர்.

பிரபாவுக்குத் தலை சுழன்றது. "ஒரு சமயம் இவன் பாடிக்கொண்டு என் நந்தவனத்துக்கு வந்திருந்தான். உமா இவனை அழைத்துப் பாட்டுக் கேட்டாள்!" என்றாள்.

"என்ன பாட்டு அது!" என்று கேட்டார் ராஜா.

பிரபாவுக்குப் பிராணனே போய்விட்டது போலிருந்தது. ராஜா இம் மாதிரிக் கேட்பதற்கு ஏதாவது காரணம் இல்லாமலா இருக்கும்! இன்று நம் மானம் பறிபோகாமல் இருக்கவேண்டுமே! அட கடவுளே!" என்று மனத்துள் நினைத்துக் கொண்டாள். பிறகு மெதுவாக, "அவன் பாட்டு நன்றாகத்தான் இருந்தது" என்றாள்.

ஹரிச்சந்திரர் புன்முறுவலுடன், "என்ன பாட்டுப் பாடினான்!" என்று கேட்டார்.

'இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லி விட்டால் அப்புறம் என்ன பாக்கி இருக்கிறது!' என்று எண்ணினாள் பிரபா. இது நல்லதற்குக் காலமில்லை என்ற எண்ணம் பிரபாவின் உள்ளத்திலே வலுப்பெற்றது. அவள் மேல் கூரையைப் பார்த்தவாறு, "ஏதோ சூரதாசரின் பாட்டு என்று நினைக்கிறேன்!" என்றாள்.

"'உள்ளங் கவர்ந்து சென்றான்—கண்ணன்' என்னும் பாட்டுத்தானே அது!" என்று குறுநகை புரிந்தவாறே கேட்டார் ராஜா.



"ஏன் ஐயா! பாகவதர் தம்பூராவில் பூசணிக்காயைக் கட்டிக் கொண்டு கச்சேரி செய்கிறார்?"

"இதுதான் இந்த இளம் வித்வானின் முதல் கச்சேரி; திருஷ்டிப்படாமல் இருக்க வேண்டுமே என்பதற்காகத்தான்!"

பிரபாவின் கண்களெதிரே கும்மிருட்டுப் பரவியது. அவள் தொப்பென்று தரையிலே உட்கார்ந்து மிகவும் மலினமான குரலில், "ஆமாம், இதே பாட்டுத்தான்!" என்றாள். பிறகு மனத்தை இன்னும் திடப்படுத்திக் கொண்டு "இது உங்களுக்கு எப்படித் தெரிந்தது!" என்று கேட்டாள்.

"இந்த யோகி அடிக்கடி இங்கே என்னிடம் வந்து பேசுவது உண்டு. எனக்கும் அந்தப் பாட்டு மிகவும் பிடித்தமானது. அவன் தான் எனக்கு உன்னைப் பற்றிச் சொன்னான். ராஜ குமாரிக்கு என்பாட்டு மிகவும் பிடித்திருந்தது. மறுபடியும் வருமாறு ராஜகுமாரி என்னிடம் சொல்லியிருக்கிறாள் என்று கூட அவன் என்னிடம் சொன்னானே!" என்றார் ராஜா.

பிரபாவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "அவன் சொன்னது அவ்வளவும் பொய். நான் அவனிடம் ஒன்றுமே சொல்ல வில்லை!" என்றாள் அவள்.

"அந்த மனிதன் பொய் சொல்லுகிறான் என்பதை நான் அப்பொழுதே தெரிந்து கொண்டு விட்டேன். தற்புகழ்ச்சி செய்து கொள்வது என்பது பாடகர்களுடன் கூடவே பிறந்தது. அவன் பாட்டுக் கெடுதலாக இல்லையே!" என்று கேட்டார் ராஜா.

"நல்லதை யாராவது கெடுதல் என்று சொல்லுவார்களா!" என்றாள் பிரபா.

"அவன் பாட்டைக் கேட்க ஆசையாக இருந்தால் சொல்லு. சொல்லி அனுப்பினால் ஓடோடியும் வருவான்" என்றார் ராஜா.

மறுபடியும் அவனைக் காணும் பாக்கியம் கிடைக்குமா!—இந்த நம்பிக்கை பசுமை யுற்றுப் பிரபாவின் முகத்திலே அவாநிச் சோபையை உண்டு பண்ணியது. வெகு கால மாகவே, 'எந்த விஷயத்தை மறந்து விட வேண்டும்' என்று பிரம்மப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தாளோ, அது மறுபடி யும் துளிர்விட்டுத் தளிர்த்துத் தழைத்து விட்டால் என்ன செய்வது என்ற அச்சம் அவள் உள்ளத்திலே எழுந்தது. ஆகவே, "இப்பொழுது பாட்டுக் கேட்கும் நிலைமை யில் என் மனம் இல்லை" என்றாள்.

"உனக்காவது, பாட்டுக் கேட்க ஆசை இல்லையாவது! நீ சொன்னாலும் நான் கேட்க மாட்டேன். இப்பொழுதே அவனை வரச் சொல்லுகிறேன், பார்!" என்றார் ராஜா.

அடுத்த கணம் அவர் 'விடுவிடு' என்று வெகு வேகமாக அறையை விட்டு வெளி யேறினார். பிரபாவினால் அவரைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. அவள் இதயத்திலே இன்பமும் துன்பமும் மாறி மாறி அலைகள் போல மோதலாயின. பத்து நிமிஷத்துக் கெல்லாம் சிதார் வாத்தியத்தின் இனிய நாதத் துடன் கலந்து யோகியின் பாட்டு காதிலே ஒலித்தது.

'உள்ளங் கவர்ந்து சென்றான்—கள்ளன்'

அதே இனிமை பொழியும் ராகம்! அதே தெளிவு! அதே குழைவு! அந்தப் பாட்டுப் பிரபாவை இன்ப லோகத்துக்கே இழுத்துச் சென்றது. சில கண நேரத்துக் கெல்லாம் யோகியின் மனமோகன உருவம் தன்னை நோக்கி வருவதைக் கண்டாள். உள்ளத்தை வெட்டி இழுக்கும் அதே பார்வை! தெய்வக் களைபொருந்திய திருமேனி! முகத்திலே இலே சான இளநகை படர்ந்திருந்தது. பிரபா மருட்சி நிறைந்த பார்வையில் யோகியைப் பார்த்தாள். திடீரென்று அவளுடைய இதயத்திலே துடிப்பு அதிகரித்தது. அவள் கண்களை மறைத்திருந்த மாயத்திரை மறைந்தது. அன்பே உருவாக, உள்ளம் நெகிழ, உடல் நெகிழக் கண்களில் நீர் ஆறாகப் பெருகத் தன் கணவரின் காலடிகளில் விழுந்தாள். பிறகு தழுதழுத்த குரலில், "என் ஆருயிரே! நாதா!" என்று ஆரம்பித்தாள். அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை.

ராஜா ஹரிச்சந்திரருக்கு இன்று தான் உண்மையாகவே வெற்றி கிடைத்தது. அவர் பிரபாவைத் தூக்கி ஆலிங்கனம் செய்து கொண்டார். இருவரும் இன்று தான் ஓருயிராக ஆனார்கள்.

"நான் இந்த வேஷம் எதற்காகப் போட்டேன், தெரியுமா! எனக்குப் பாட்டு என்றாலே பைத்தியம். உனக்கும் பாட்டு என்றால் உயிர் என்று கேள்விப்பட்டேன். உன்னை என் இதயராணியாக ஏற்றுக்கொள்ளு வதற்கு முன் ஒரு தடவை பார்த்துவிட வேண் டும் என்று ஆசை. அதற்கு இதுதான் இலகு வான உபாயமாகத் தோன்றியது" என்றார்.

பிரபா அன்புடன் அவரைப் பார்த்து, "நீங்கள் யோகியின் வேஷத்தில் என்னிடம் எதை அடைந்தீர்களோ, அதை ராஜாவாக இருந்து அடைய முடியாது. இப்பொழுது நீங்கள் தான் என் கணவர், என் காதலர், என் உயிர் அனைத்தும். ஆயினும் நீங்கள் என்னை ஏமாற்றி விட்டீர்கள்! இல்லாத குழப்பத்தை வீணாக என் உள்ளத்திலே எழுப்பி என் ஆத்மாவைக் களங்கப்படுத்தி விட்டீர்கள். இதற்கு ஜவாப்தாரி யார்!" என்று கேட்டாள்.

"ஜவாப்தாரியும் இல்லை, நானும் இல்லை, எல்லாம் யோகியின் வேஷம் தான்!" என்று சொல்லிக் குறுநகை புரிந்தார் ராஜா.

# வட்ட மேஜை

## கிராம ரேஷன் ஒழிக !

'அன்ன விசாரம் அதுவே விசாரம்' என்ற பரிதாப ஓலமும், 'உணவு ரேஷன் ஒழிக!' என்ற கிராமவாசிகளின் கூக்குரலும், 1600 மைலுக்கு அப்பால் டில்லியில் இருக்கும் என் காதையும் துளைத்தவண்ண மிருக்கின்றன.

தமிழ்நாட்டில் கிராம மக்களுக்குக் காங்கிரஸின் மேல் கசப்பும் வெறுப்பும் வளர்ந்து வருவதற்கு முக்கிய காரணம் கிராமங்களில் இப்பொழுது நடைபெற்று வரும் உணவு ரேஷன் முறையாகும் என்பது மிகையாகாது.

சமீபத்தில், தமிழ்நாட்டிலுள்ள ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர்களும், காரியதரிசிகளும் சென்னையில் கூடி, கிராம ரேஷனை எடுத்துவிட வேண்டுமென்று வற்புறுத்தினார்களாம். சென்னை மாகாண உணவு ஆலோசனைக் கமிட்டியும் இதே விதமாகச் சிபார்சு செய்துள்ளது. கிராம ரேஷன் தோற்றுவிட்டது என்று சென்னை முதல் அமைச்சரும் ஒப்புக்கொண்டு விட்டார். இனி ஏன் தாமதம்?

உணவுக் கட்டுப்பாடு காகிதத்தில் சரியானதாக இருக்கலாம். ஆனால் நடைமுறையில், சிறப்பாகக் கிராம மக்கள் விஷயத்தில் இது சிறிதும் ஒழுங்காக நடைபெறாமல் விபரீத ஏமாற்றத்தை விளைவித்துள்ளது. கிராமத்தில் விளைந்த தானியங்களைக் கொண்டுபோய்விட்டு, வாக்குக் கொடுத்த ரேஷன் அளவு கொடுக்காமல், மூன்று நான்கு அவுன்ஸ்—அதுவும் நிச்சயமில்லை—என்ற முறையில் கண்ட்ரோல் நடத்தினால் மக்கள் மனம் நொந்து பேசுவதில் என்ன வியப்பு! முடிந்தால் ஒழுங்காகச் செய்யுங்கள்; முடியாவிட்டால் ரேஷனை விட்டுத் தொலையுங்கள்!' என்பதுதான் கிராம மக்களின் வேண்டுகோளாகும்.

உணவுக் கட்டுப் பாட்டின் நன்மைகளை எடுத்துரைத்தால், கிராம மக்கள் ஒத்துக் கொள்ளுவார்கள். ஆதலால் அதற்குப் பிரசாரம் செய்யுங்கள் என்று மேற்படி சென்னைக் கூட்டத்தில் சில காங்கிரஸ் பிரமுகர்கள் தெரிவித்தார்களாம்! த. நா. கா. காரியக் கமிட்டி ஏற்படுத்தி உள்ள உப கமிட்டி, இந்தப் பிரசார வேலையின் பயனைத் தங்கள் அறிக்கையில் குறிப்பிடுவார்களென நினைக்கிறேன்.

கிராம வாசிகளுக்கு எது தங்களுக்கு நன்மை என்று தெரியும். கட்டுப்பாட்டின் அவசிய நல்லுபதேசம் அவர்கள் காதில் இப்பொழுது ஏறும் என்று தோன்றவில்லை. ஏதோ செய்து பார்க்கட்டுமே!

எனவே, சென்னை அரசாங்கத்தார் கிராம ரேஷனை எடுத்துத் தொலைக்க வேண்டிய வேலையில் உடனே இறங்குவார்களாக! பம்பாயில் நடைபெற விருக்கும் உணவு மகா நாட்டில் நமது சென்னை உணவு மந்திரி, கிராம ரேஷனை எடுக்க வேண்டிய அவசரத்தையும், அவசியத்தையும் தைரியமாகவும் தீவிரமாகவும் எடுத்துக் கூறி வெற்றி அடைவாரென நம்புகிறேன். இது விஷயமாக இங்குள்ள இந்திய அரசாங்க மந்திரியைக் கேட்டால், 'எல்லாம் உங்கள் ராஜ்ய சர்க்கார் இஷ்டம் போல் செய்துகொள்ளட்டுமே' என்கிறார்கள். அங்கே கேட்டால், 'மத்திய அரசாங்கம் குறுக்கிடுகிறது' என்கிறார்கள். இந்தப் பூப்பந்தாட்டத்தில், கஷ்டப்படுவது மக்கள். உண்மை எப்பக்கமோ, யாருக்குத் தெரிகிறது? இரண்டு பக்கமும் இருக்க முடியுமோ! அல்லது இரண்டு பக்கமும் இல்லையோ! ஆண்டவனே அறிவார்!

மத்திய அரசாங்கத்தின் உணவுக் கொள்கை மிகவும் விசித்திரமா யிருக்கிறது. இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் ஒரே மாதிரியான முறை கையாளப்படுவதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் உற்று நோக்கினால் அநேக விதமான மாறுபாடுகளைக் காண்கிறோம்.

அரிசிக் கொள்முதலை எடுத்துக் கொள்ளுவோம். சென்னையின் கொள் முதல், இந்தியாவின் மற்ற எல்லாப் பாகங்களின் மொத்தக் கொள்முதலுக்கு அநேகமாகச் சமானமாயிருக்கிறது. கிராம மக்களில் எத்தனை சத விகிதம், உணவு ரேஷனுக்கு உட்பட்டிருக்கிறார்கள் என்பதைப் பார்ப்போம். சென்னையில் 45 சதவிகிதமாகிறது. ஒரிசாவில் கிராம ரேஷனே கிடையாது. ஐக்கியமாகாணத்தில் 1% (ஒன்று) பீஹாரில் 2%, மேல் வங்காளத்தில் 7%, மத்திய பிரதேசத்தில் 5%, அஸ்ஸாமில் 14% ஆகும்.

மற்ற மாகாணங்களில் கிராம ரேஷன் இந்த அளவு இருக்கும்போது, சென்னையில் மட்டும் ஏன் இவ்வளவு பரந்த அளவு இருக்கவேண்டும்?

விலை வாசி புள்ளி விவரம் மிகவும் ருசிகரமானது. அரிசி பல ரகங்களின் சராசரி 1949—50 கொள் முதல் விலை மணங்கு ஒன்றுக்கு என்று கொடுத்துள்ளேன்.

பஞ்சாப் ரூ. 20, மத்திய மாகாணம் ரூ. 24, பம்பாய் ரூ. 17, பீஹார் ரூ. 17, வங்காளம் ரூ. 12, அஸ்ஸாம் ரூ. 16, பெப்சு ரூ. 22, விந்திய பிரதேஷ் ரூ. 13. சென்னை ரூ. 8—4—3. (அதாவது 7—14—3 லிருந்து 9—2—3 வரை.)

இந்தியாவில் அரிசியின் விலை வாசியில் இவ்வளவு ஏற்றத்தாழ்வு இருப்பானேன்! விலைவாசிகளை ஒரே மாதிரி ஆக்குகிறோம் என்று சொல்லிக் கொண்டிருந்ததன் பொருளென்ன! சென்னை விலை மட்டும் இவ்வளவு குறைந்திருப்பானேன்? சென்னை மாகாணத்தில் 1944—45-ம் வருடத்தை விட 1949—50-ல் நெற்பயிர் விளையும் விஸ்தீரணத்தில், ஏழு லக்ஷம் ஏக்கர் குறைந்திருப்பதில் ஆச்சரியப்படுவதற்கில்லை போலும்! மில்லட் (பயறு தானிய வகை) விஸ்தீரணத்திலும் மேற்கண்ட இரண்டு வருஷங்களுக்கிடையே 13 லக்ஷத்து 61 ஆயிரம் ஏக்கர்தான் குறைந்திருக்கிறதாம்!! உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காக எடுத்த தீவிர நடவடிக்கைகளின் பலன் மிகவும் அபாரமா யிருக்கிற

# நான்கு நன்மணிகள்





மேட்டூர்
**சந்தன சோப்**

*பரிமளமிக்கது*
*பரிசுத்தமானது*



*கவர்ச்சிமிக்க*
*காந்தி அளிக்க*

**ரூப்**
**டாய்லெட் சோப்**



காவேரி
**ஸுபர் சோப்**

*சால்முக்ரா எண்ணெய் சேர்ந்தது*
*சுகாதாரத்திற்கு இன்றியமையாதது*



*சுத்தமான சலவைக்கு*
*உத்தமமானது*

**காவேரி**
**பார் சோப்**



**மேன்மையான**
**"மேட்டூர் கெமிகல்ஸ்" தயாரிப்புகள்**

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை - சேலம்

பூரண விற்பனை ஏஜண்டுகள் :
அலைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூடர்ஸ் லிமிடெட்
120, அரண்மனைக்காரத் தெரு, சென்னை & கிளைகள்

# சீனத்து மரப்பாச்சி

எஸ். ராஜம்

மிஸ்டர் கோவிந்தனுக்கு எல்லாமே வியப்பாகத்தான் இருந்தது. மிஸ்டர் வேணு, தன்னுடைய யசமானர், இப்படி விகாரமான ஒரு மரப்பாச்சியை வைத்து அழகு பார்த்து விளையாடிக் கொண்டே காலைப் பொழுதைப் பூராவும் வீணாக்கி விட்டாரே என்று கோபம் கோபமாக வந்தது. பத்தாயிரம் ரூபாய் பீஸ் தரக்கூடிய கேஸ் ஒன்று காத்திருந்தது. அதைப் பற்றிய சிந்தனையே இல்லாமல் இப்படி ஒரு மனிதன் ஒரு மரப்பாச்சியை வைத்துக் கொண்டு குழந்தை மாதிரி விளையாடிக் கொண்டிருப்பாரோ! ஆச்சரியமாகத்தான் இருந்தது.

மிஸ்டர் வேணுவுக்குப் புத்தி பேதலித்து விட்டதுதான் இதற்குக் காரணம் போலும்! அதுவும் இரண்டொரு வாரங்களாகவே அவருடைய நடத்தை திருப்தியாகவே யில்லை. அதிக நாள் தாங்காது. நான் கூடப் பிழைப்புக்கு வேறு ஒரு இடம் தேடிக் கொள்ள வேண்டியதுதான் போலும்! பணம் வரும் சமயத்தில் சும்மா யிருந்து விடுகிறார்; இல்லை மேல் வந்த பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுகிறார். இதெல்லாம் பைத்தியக்காரத்தனமில்லாமல் வேறு என்ன!—இவ்விதம் காலைப் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டே மிஸ்டர் கோவிந்தன் தனக்குள் சிந்தித்தான்.

மிஸ்டர் வேணு மேஜைமேல் அந்த மரப்பாச்சியை நிறுத்தி வைத்துவிட்டு, நிமிர்ந்து, தன் உதவியாளைப் பார்த்தார். முகத்தில் ஒரு புன்னகை தவழ அவர் சொன்னார்: "இந்தச் சீனத்து மரப்பாச்சி என்னைப் போலவே அழகா யிருக்கிறதில்லையா!"

கோவிந்தன் எழுந்து போய் அந்தச் சீனத்து மரப் பாச்சியைக் கையில் எடுத்துப் பார்த்தான். அதன் உயரத்துக்கு, அது ரொம்பவும் கனமாகத்தான் இருந்தது. கை பட்டுப் பட்டுச் சிவப்பு மரம் மெருகேறி யிருந்தது. ஒரு சீனக்காரனின் உருவம் அது—உலகத்தையே அழித்துவிட, விரும்புகிற மந்திரவாதி போலக் கையை உயரத் தூக்கிக் கொண்டிருந்தான் அவன். முப்பத்திரண்டு பற்களும் தெரிய, காதோடு காது வாய் கிழியச் சிரிக்கிற மாதிரி இருந்தது அந்த முகம். பற்கள் ஒரு காலத்தில் வெண்மையாக இருந்திருக்கலாம். இப்போது சிற்சில இடங்களில் மஞ்சளாகவும், சிற்சில இடங்களில் கருப்பாகவும், சிற்சில இடங்களில் வெள்ளையாகவும் இருந்தன அந்தப் பற்கள். ஆஹா! என்ன கோரம்! என்ன கோரம்! கோவிந்தன் சொன்னான்:—"இது சீனக்காரனுக்கு அழகு என்று தோன்றலாம். எனக்கு அப்படித் தோன்றவில்லை" என்று சொல்லி விட்டு, சீனக்காரன் மரப் பாச்சியை மீண்டும் மேஜைமேல் வைத்துவிட்டுத் தன் யதாஸ்தானத்தில் போய் உட்கார்ந்து கொண்டான்.



மிஸ்டர் வேணு சொன்னார்: "பத்து தலை முறைகளுக்கு முன்னால் அதாவது சற்றேறக் குறைய முந்நூறு வருஷங்களுக்கு முன்னால் நான் சீன தேசத்தில் ஒரு கவியாகப் பிறந்தேன்."

ஏது, பைத்தியம்தான் முற்றிவிட்டது என்று கோவிந்தனுக்குச் சந்தேகம் வலுத்தது.

"கவி என்றால் ஒரு கோணத்திலிருந்து பார்த்தால் பைத்தியம் என்றுதானே அர்த்தம்! அது கிடக்கட்டும். கவியாகப் பிறந்த நான் நாற்பது வருஷங்களில் ஆஸ்தான கவியாகி விட்டேன். என் கவிதைகள் இன்னமும் சீனத்தில் வழக்கி லிருக்கின்றன."

"இருக்கும், இருக்கும்" என்றான் கோவிந்தன்.

"நான் அப்போது எந்த உருவம் படைத்திருந்தேனோ அந்த உருவம்தான் இந்த மரப்பாச்சி. அப்போது என் பெயர் சீ சீ போ; போ போ சீ என்கிற புனை பெயரில் நான் எழுதிய கவிதைகள் இன்னமும் சீனக் கவிதைத் திரட்டுக்களில் காணக் கிடைக்கின்றன" என்றார் துப்பறியும் நிபுணர் வேணு.

"சீனக் கவிதைத் திரட்டுக்களைப் புரட்டிப் பார்க்கிற உத்தேசம் எனக்கில்லை" என்றான் கோவிந்தன்.

"சீனத்துக் கவிதையும் கலையும் உலகிலேயே மிக உயர்ந்த விஷயங்கள். அவற்றைப் படிக்காதவன், பார்க்காதவன் முழு மனிதனாகமாட்டான். அதிருக்கட்டும், நான் இப்போது சொல்லிக் கொண்டிருந்தது என்னவென்றால்......"

"முந்நூறு வருஷங்களுக்கு முன் சீ சீ போ என்ற பெயருடனும், போ போ சீ என்கிற புனை பெயருடனும் நீங்கள் கவிதை எழுதினீர்கள்......"

"சீனத்துச் சக்கரவர்த்தியின் ஆஸ்தான கவிக்கும் அவருடைய இரண்டாவது மந்திரிக்கும் எப்போதுமே பொருத்தமில்லாமலிருந்தது. ஒரு சமயம் சக்கரவர்த்தியினுடைய ஏழாவது

மனைவியின் விலையுயர்ந்த நகைகள் இரண்டாவது மந்திரியிடம் கிடைத்தன. அவை தட்டாரிடம் கொடுத்துப் புதுப்பிப்பதற்காக அவரிடம் ரகசியமாக வந்தன. ஆனால் அவை மீண்டும் சொந்தக்காரியிடம் போவதற்கு முன் அந்தச் சொந்தக்காரி இறந்து விட்டாள்—அரண்மனை ரகசியங்களில் ஒன்று அந்தச் சாவு. அதைப்பற்றி இப்போது பகிரங்க விசாரணை நடத்தி லாபம் இல்லை. நகைகள் இரண்டாவது மந்திரியிடமே இருந்தன. நகைகளைக் காணவில்லை என்று யாராவது தேடக்கூடுமே என்று இரண்டாவது மந்திரி அவற்றிற்கு ஒரு ரகசியமான ஒளிவிடம் தேடினான். அது வேறு ஒருவருக்கும் தெரியாது. ஆஸ்தான கவிஞருக்கு மட்டுமே தெரியும்.''

''கதை சுவாரசியமாகத் தானிருக்கிறது. ஆனால்......'' என்று கோவிந்தன் தொடங்கு முன் மிஸ்டர் வேணு குறுக்கிட்டார். ''பத்து மணிக்கு வரச் சொல்லியிருக்கிறோமே அந்த மாணிக்கச்செட்டியார்தான் அந்தக் காலத்தில் அதாவது பத்து தலைமுறைக்கு முன்—சீனச் சக்கரவர்த்தியிடம் இரண்டாவது மந்திரியாக இருந்தார்'' என்று முடித்தார்.

மிஸ்டர் கோவிந்தனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. மாணிக்கம் செட்டியாரையும் அவருடைய கேஸையும் பற்றித் தம் மரப்பாச்சி விளையாட்டில் வேணு மறந்தே விட்டார் என்றுதான் அவன் எண்ணியிருந்தான். வேணு இவ்வாறு கூறியதும், ''அவரை ஞாபகமும் இருக்கிறதா! இன்னும் அரை மணியில் வந்து விடுவாரே!'' என்றான்.

''வரட்டும்! வரட்டும்! அவரை வரவேற்கவே நான் தயாராக இருக்கிறேன்'' என்றார் துப்பறி நிபுணர் வேணு. ''பாக்கிக் கதையையும் கேளு. அந்த விலையுயர்ந்த நகைகளை ஒரு நண்பனிடம் கொடுத்துப் பத்திரப்படுத்தச் சொன்னார் சீனச் சக்கரவர்த்தியின் இரண்டாவது மந்திரி. அந்த நண்பன் பத்திரப்படுத்தினான்—ரொம்பவும் நன்றாகவே பத்திரப் படுத்தினான். மந்திரி பலகாலம் கழித்து நகைகளைத் திருப்பிக் கேட்டுப்போது, நண்பன் ஒரு 'செட்' போலி நகைகளைக் கொடுத்து விட்டான்.''

''உம்......''

''அந்த நண்பனைத் சித்திரவதை செய்தும் உண்மையான நகைகள் கிடைக்கவேயில்லை'' என்று கதையை மிஸ்டர் வேணு முடிப்பதற்கும், வெளியே தோட்டத்தில் ஒரு கார் வந்து நிற்கும் சப்தம் கேட்பதற்கும் சரியாக இருந்தது.

''அதோ, மாணிக்கம் செட்டியாரே வந்து விட்டார்'' என்று அவரை வரவேற்க எழுந்து போனான் கோவிந்தன்.

## 2

''செட்டியார்வாளா! வரவேண்டும்! வரவேண்டும்! இப்படி உட்காருங்கள்'' என்று மாணிக்கம் செட்டியாரை வரவேற்றார் வேணு. அதே சமயம் அறையிலிருந்த கடிகாரம் மணி பத்தடித்தது.

''தேவலையே! சரியான 'டய'த்துக்கு வந்து விட்டீர்களே!'' என்றார் வேணு.



''ஆமாம், நீங்கள் பல ஜோலிக்காரர். ரொம்பவும் என்னால் உங்களுக்கு அசௌகரியம் ஏற்படக்கூடாது என்று 'டய'த்துக்கு வந்து சேர்ந்தேன்'' என்றார் செட்டியார்.

''சந்தோஷம்! நகைகளைக் கண்டு பிடித்துத் தங்களிடம் ஒப்படைத்து விட்டால் பத்தாயிரம் ரூபாய் தருவதாகச் சொன்னீர்களல்லவா!''

''ஆமாம். தாங்கள் சொன்ன நேரத்தில் நகைகளைக் கண்டு பிடித்துத் தந்து விடுவீர்கள் என்கிற நம்பிக்கையில் பத்தாயிரத்துக்குச் செக்கு எழுதிக் கொண்டுவந்து விட்டேன். 'செக்'கூட இதோ இருக்கிறது'' என்று, சட்டைப் பையிலிருந்து ஒரு உறையை எடுத்து மிஸ்டர் வேணுவின் கையில் கொடுத்தார்.

''தாங்கள், என்னிடம் வைத்துள்ள நம்பிக்கையைக் கண்டு நான் சந்தோஷமடைகிறேன்'' என்றார் மிஸ்டர் வேணு.

''நகைகள்...!''

''இப்பவே தங்களிடம் ஒப்படைத்து விடுகிறேன். ஆனால் மீண்டும் ஒரு தரம் நேற்று தாங்கள் என்னிடம் சொன்ன விஷயங்களைச் சொல்லுங்கள். அந்த நகைகள் உங்களிடம் வந்து சேர்ந்த வரலாற்றையும், அவை காணாமற்போன விவரங்களையும் மீண்டும் தயவு செய்து சொல்லுங்கள்'' என்றார் மிஸ்டர் வேணு.

மாணிக்கம் செட்டியார் ஒருகணம் யோசித்தார்; பிறகு சொன்னார்: ''உம்மைப் பற்றி ஊரில் சொல்லிக் கொள்கிற வதந்திகள் எல்லாம் உண்மைதான் ஐயா!''

''என்ன அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்!'' என்று கேட்டார் வேணு.

''நீங்கள் ஒரு திறுசான ஆசாமி என்றும், உங்களை அணுகுவதே ஆபத்தாக முடிந்தாலும் முடியும் என்றும் சொல்லிக் கொள்கிறார்கள்!'' என்றார் செட்டியார்.

''யாருக்கு ஆபத்து! மடியில் பயமிருப்பவன் பயப்பட வேண்டும். உமக்கென்ன ஐயா, பயம்! சொல்லும்!'' என்றார் வேணு.

அப்போது மாணிக்கம் செட்டியாரின் முகம் சற்றுக் கறுத்தது மாதிரி, அவரையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த கோவிந்தனுக்குத்

தோன்றியது. ஆனால் அவர் மனசில் என்ன இருந்ததோ—கடவுளுக்கும், பிறர் மனசை அறிவதில் வல்லவரான மிஸ்டர் வேணுவுக்கும் தான் தெரியும்!

மாணிக்கம் செட்டியார், மென்று விழுங்கிக் கொண்டே தொடங்கினர்: "மூன்று நாட்களுக்கு முன் ரொம்பவும் லாபகரமான ஒரு பேரம் முடிந்தது. தொண்ணூறு, நூறு ஆயிரம் பெறுமான ஒரு செட் வைர நகைகளை, அவசரத் தேவையை உத்தேசித்து எழுபத்தையாயிரம் விலைக்குக் கொடுத்தார்கள். நான் வாங்கிக் கொண்டேன், ரொக்கமாக எழுபத்தையாயிரம் கொடுத்து."

"விற்றவர்கள் வந்து கேட்டவுடனேயே கொடுத்து விட்டீர்களோ!"

"இல்லை, மறுநாள் வரச் சொல்லிப் பணம் எண்ணிக் கொடுத்தேன். ஆனால் அவர்கள் வந்த அன்றே அந்த செட் நகைகளை வாங்குவதாகத் தீர்மானித்து விட்டேன். நகைகளை, என் வீட்டில் என் இரும்புப் பெட்டியில் வைக்கலாம் என்று எடுத்துக் கொண்டு கிளம்பினேன். சட்டை உள் பையில் நகைகளைச் சிறு மூட்டையாகக் கட்டிப் போட்டிருந்தேன். வீட்டுக்குப் போய்ப் பார்க்கும் போது சட்டைப் பை காலியாக இருந்தது. என் காரில் தான் போனேன். வழியில் எங்கேயும் நிற்கவில்லை. எப்படிப் போயிருக்கக் கூடும் என்று நீர் மானிக்கவே முடியவில்லை. அங்குமிங்கும் ஓடினேன்; தேடினேன். பிறகு நேற்று உங்களிடம் வந்தேன்" என்று கதையை முடித்தார் மாணிக்கம் செட்டியார்.

"இவைதான் தாங்கள் விட்டு விட்ட நகைகளா என்று பாருங்கள்" என்று கூறிக் கொண்டே மிஸ்டர் வேணு தம் மடியிலிருந்த சினத்து மரப்பாச்சியை எடுத்துக் கழுத்தைத் திருகினர். பொம்மையின் தலை வேறாக வந்து விட்டது. மரப்பாச்சியின் வயிற்றிலிருந்து ஒரு செட் வைர நகைகளை—ஒரு ஜோடித் தோடு, இரண்டு ஜோடி வைர வளைகள், ஒரு நெக்லேஸ், இவைகளை எடுத்து மேஜை மேல் வைத்தார். பாய்ந்து போய்ப் பரபரப்புடன் அவற்றை அள்ளினர் மாணிக்கம் செட்டியார்.

"அடடா! இதற்குள் கண்டு பிடித்துக் கொடுத்து விட்டீர்களே! உங்கள் சாமர்த்தியமே சாமர்த்தியம்! என் நன்றியை எப்படித் தெரிவிக்கப் போகிறேன் தங்களுக்கு!" என்றார் செட்டியார் ஆச்சரியத்துடன்.

மிஸ்டர் வேணு பரபரப்பில்லாமல் சாவதானமாகப் புன்னகை புரிந்து கொண்டே சொன்னார்: "செட்டியார்வாள்! பத்தாயிரம் எனக்குப் போதுமானது!" பிறகு ஆச்சரியத்தில் அழுந்தியவனாக உட்கார்ந்திருந்த கோவிந்தன் பக்கம் திரும்பி "கோவிந்தா! போய், இந்தச் செக்குக்குப் பணம் மாற்றி நம் கணக்கில் கட்டிவிட்டு வா!" என்றார்.

அதே சமயம் வெளியே தோட்டத்தில் இன்னொரு கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது. "அதோ அந்தக் காரில் வருகிறவர்களைப் பக்கத்து அறையில் இருக்கச் சொல்லு. சரியாகப் பத்து நிமிஷம் கழித்து உள்ளே வரச் சொல்" என்றார் மிஸ்டர் வேணு.

கோவிந்தன் போய் விட்டான். மேஜை மேல் கிடந்த வைர நகைகளைத் தம் சட்டைப் பைகளில் பத்திரப் படுத்திக் கொண்டார் மாணிக்கம் செட்டியார். இனி அவருக்கு அங்கிருக்கப் பிடிக்கவில்லை. எவ்வளவு சீக்கிரம் அவ்விடத்தை விட்டுப் போக முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அவருக்குப் போய் விடத்தான் ஆசை. "ஸார்! உங்களுக்கு அவசர ஜோலியிருந்தால் கவனியுங்கள். நான் குறுக்கே நிற்க விரும்பவில்லை" என்றார் செட்டியார்.

"அப்படி ஒன்றும் அவசரமில்லை. ஆனால் எப்படி இந்த நகைகளைக் கண்டு பிடித்தேன். என்று தங்களுக்கு நான் சொல்ல வேண்டாமா!" என்று கேட்டார் மிஸ்டர் வேணு.

அந்த நகைகளை எடுத்துக் கொண்டு உடனேயே கிளம்பி விட வேண்டும் என்று செட்டியாருக்கு ஆவல். ஆனால் ஆவலையும் அவசரத்தையும் மறைத்துக் கொண்டு "சொல்லுங்கள் கேட்கிறேன்" என்றார்.

"நேற்று நீங்கள் வந்து விட்டுப் போனபிறகு நான் அகஸ்மாத்தாக அருணாசலம் ஏலக் கம்டெனிக்குள் போனேன். அங்கு இந்தச் சீன மரப்பாச்சியைப் பார்த்தேன். ஐந்து ரூபாய்க்குப் போகும் என்று எண்ணினேன். எடுத்த எடுப்பிலேயே யாரோ ஐம்பது ரூபாய்க்குக் கேட்டார்கள். நான் ஐம்பத்தைந்து என்றேன். ஐம்பது கேட்டவன் ஏலத்தில் அதிகம் கேட்கவில்லை. ஆனால் மரப்பாச்சி என் கையில் வந்




வரவேற்க வந்த நண்பர்:—என்னங்க நீங்கள் அமெரிக்காவுக்குப் போன சூட்டோடு திரும்பி வந்துவிட்டீர்களே?

சூட்டுக்காரர்:— இல்லே யா, இது வேறு சூட்டு, ஸார்! நான் போகிற பொழுது வெள்ளை சூட்டுப் போட்டுக் கொண்டு போனேன்!

றதும் அவன் 'நூறு ரூபாய் தருகிறேன் கொடுத்து விடு' என்று கேட்டான். இதில் ஏதோ விசேஷம் இருக்கிறது என்று நிர்மானித்து, அவருக்குக் கொடுக்க மறுத்து விட்டேன். ஆனால் அப்படிக் கேட்ட மனிதரிடம் சந்தேகம் ஏற்பட்டு, அவனையே கவனித்தேன். அவன் ஆறானு பாருவான இரண்டு ஆசாமிகளிடம் ஏதோ ரகசியமாகப் பேசுகிறான் என்று கவனித்ததும் என் சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று. ஏலக் கம்பெனியிலிருந்து வாசல் பக்கமாக வெளியேறுமல், பின் பக்கமாக வெளியேறி கவனித்தேன். அந்த ஆறானுபாருவான மனிதர்கள் எனக்காகக் காத்திருந்தார்கள்! நான் வீடு திரும்பி, இந்த மரப்பாச்சியைச் சோதித்துப் பார்த்தேன். அதன் பாதத்தில் இரண்டு வரிக் கவிதை எழுதியிருந்தது.

"மனிதன் கழுத்தை மனிதன் அறுக்கிறன்
ஆனல் என் கழுத்தைத் திருகி விடாதே"

என்று எழுதி இருந்தது. இருந்தாலும் நான் அதன் கழுத்தைத் திருகிப் பார்த்தேன். உள்ளே நகைகள் இருந்தன. அவை உங்களுடையவைதான் என்று ஏற்பட்டுவிட்டது. அதிருஷ்டம்தான்" என்று கூறி முடித்தார் மிஸ்டர் வேணு.

தம் சட்டைப் பையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டே செட்டியார் சொன்னர்: "பேஷ்! ரொம்ப சுலபமாகவே பத்தாயிரம் ரூபாய் சம்பாதித்து விட்டீர்களே!" இதைச் சொல்லி விட்டு அவர் வெளியேற எழுந்தார்.

எழுந்தவர், அதே சமயம் உள்ளே வந்தவரைக் கண்டவுடன் முகம் வெளுக்க மீண்டும் நாற்காலியில் உட்கார்ந்து விட்டார்.

## 3

வந்தவர் கேட்டார்: "என்ன மாணிக்கம் செட்டியார்வாள்! உடம்பு சௌகரியமில்லையோ! அல்லது என்னைத்தான் ஞாபகம் இல்லையோ!"

மாணிக்கம் செட்டியார் பதில் கூறவில்லை.

மிஸ்டர் வேணு வந்தவரை வரவேற்றர். "வாருங்கள் ராமநாதன், வாருங்கள், உட்காருங்கள். நம்ம மாணிக்கஞ் செட்டியாரைத் தெரியுமே உங்களுக்குத்தான்."

"அவரை நான் சந்திப்பது இது மூன்றாவது தடவை. முதல் தடவை நான் அவரைச் சந்தித்தது ஒரு செட் வைர நகையை—என் மனைவியினுடையதை—விற்பது சம்பந்தமாகச் சந்தித்தேன். அப்போது, மறுநாள் வரச் சொன்னர்; போனேன். என் நகைகளைப் போன்ற ஒரு செட் போலி நகைகள் தயாரித்து என்னிடம் தந்துவிட்டார், பேரம் படியவில்லை என்று. நகைகளை அவர் அறுபதினாயிரத்துக்குக் கேட்டார். நான் லக்ஷம் கேட்டேன். பேச்சுச் சந்தர்ப்பத்தில் போலி நகைகளை உண்மை வைர நகைகள் என்று எண்ணி நான் ஏமாந்து போய்விட்டேன். மூன்று நாட்களுக்குப் பிறகுதான் தெரிந்தது, செட்டியார் ஏதோ இமிடேஷன் நகைகளைத் தந்து விட்டார் என்பது" என்றார் ராமநாதன்.

"நகையின் சொந்தக்காரனையே ஏமாற்றக் கூடிய அளவுக்கு அவை அவ்வளவு நல்ல இமிடேஷனு!" என்றார் வேணு.

"செட்டியார் பெரிய கலைஞர். ஒரு நாளில், இருபது மணி நேரத்தில் இமிடேஷன் செட்டுராவையும் தயாரித்து விட்டாரே! அவர் பெரிய கலைஞர் தான்" என்றார் ராமநாதன்.

இத்தனை நேரமும் சும்மா இருந்த மாணிக்கம் செட்டியார் சொன்னார்: "நீங்கள் பேசிக் கொள்வது எனக்குப் புரியவே யில்லையே! இமிடேஷன் வைர செட்டா! எது!" அவருக்கு உண்மை நகைகள் தம் சட்டைப் பைக்குள் இருக்கின்றன என்கிற தைரியம். அறையை விட்டு வெளியே ஓடிவிடப் பார்த்தார். ஆனால் அறைக்கு வெளியே இரண்டு சிங்கரர்கள் காவல் காத்து நின்று கொண்டிருந்தார்கள்.

"செட்டியார்வாளுக்குப் புரியாதுதான்" என்றார் வேணு.

"இமிடேஷன் எது! அசல் வைரம் எது! என்று செய்தவருக்கே தெரியாமல்போயிற்றே, அதுதான் விசேஷம்" என்றார் ராமநாதன்.

"என்ன! என்ன!" என்று பதறி எழுந்தார் செட்டியார்.

"ஒன்றுமில்லை. சீனத்து மரப்பாச்சியின் வயிற்றிலிருந்து எடுத்துச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டீர்களே, அவ்வளவும் இமிடேஷன், அவ்வளவுதான்!" என்றார் வேணு.

செட்டியாரின் முகம் அவ கனே அடைந்தது. "அ...அப்படியானால்......அசல்...!" என்று கூறும்போதே, நாக் குழறிற்று.

"சீனத்து மரப்பாச்சியின் உள்ளிருந்த அசல் வைர நகைகளை எடுத்து அதற்குரியவரான ராமநாதனிடம் கொடுத்து விட்டு, அவரை ஏமாற்ற எண்ணி நீர் கொடுத்த இமிடேஷன் நகைகளை நான்தான் மரப்பாச்சிக்குள் வைத்தேன். இங்கு அவற்றை எல்றப் பரிசோதிக்க மாட்டீர் என்று எனக்குத் தெரியாதா!" என்றார் மிஸ்டர் வேணு.

யாரும் பதில் சொல்லவில்லை. பிறகு தப் பறியும் வேணுவே தொடர்ந்து சொன்னார்: "மாணிக்கம்செட்டியார், தாங்கள் இமிடேஷன் நகைகளை என்னிடம் கொண்டு வந்து தந்து எப்படியாவது அசல் நகைகளைக் கண்டு பிடித்துத் தரவேண்டும் என்று நீங்கள் வந்த போது எனக்கு விஷயம் அவ்வளவாக விளங்கவில்லை தான். இந்தக் கேஸ் சரிப்பட்டு வராது என்று தான் நான் நினைத்தேன். உம்முடைய அதிர்ஷ்டம்தான். மாணிக்கம் செட்டியார் அந்த அசல் வைர நகைகளைக் கைநழுவ விட்டு, என்னிடமே வந்து சேர்ந்தார்."

"இப்படிப்பட்ட ஆசாமி அவற்றை எப்படித் தொலைத்தார் என்பது தான் எனக்கு ஆச்சரிய மாயிருக்கிறது!" என்றார் ராமநாதன்.

மிஸ்டர் வேணு சொன்னார்: "உம்மை ஏமாற்றிப் பறித்த அந்த நகைகளை அலங்காரவல்லியிடம், இமிடேஷன் நகைகள் என்று சொல்லி, ஒரு நாள் அணிவித்து அழகு பார்த்தார் செட்டியார். அலங்காரவல்லி செட்டியாருக்குத் தெரியாமல் நகைகளை ரத்தினப் பரிசோதகரிடம் காட்டி அவை அசல் வைர மென்றும், ஒரு லக்ஷமாவது பெறும் என்றும் கண்டதும், அவற்றை அப்புறப் படுத்திவிட்டாள். 'போனால் போகிறது. இமிடேஷன் தானே!' என்று செட்டியாரிடமும் சொல்லி விட்டாள். பிறகு அலங்காரவல்லி அந்த நகைகளைச் சீனத்து மரப்பாச்சியில் பதுக்கி வைத்தாள். நள்ளிரவில் வந்த திருடன் ஒருவன் அவள் வீட்டில் பல சாமான்களையும் மரப்பாச்சியையும் கொள்ளையடித்து, ஏலக் கம்பெனியில் பதினைந்து ரூபாய்க்கு மரப்பாச்சியை விற்று விட்டுப் போய்விட்டான். ஆனால் அதில் ஒரு லக்ஷம் பெறும் நகைகள் மறைத்து வைக்கப்பட்டிருக்கிற செய்தி அவனுக்குத் தெரிந்திருந்தால் அவன் விட்டிருக்கமாட்டான். அலங்காரவல்லி ஒரு சீனத்து மரப்பாச்சி ஐந்து ரூபாய் பெறுமானமுள்ளது காணமற் போய்விட்டது, கண்டு பிடித்துத் தர வேண்டும் என்று எனக்கு ஆள் அனுப்பியதும், எனக்கு எல்லாம் வெட்ட வெளிச்சமாகிவிட்டது."

ராமநாதன் சொன்னார்: "தங்களுக்கு நான் ரொம்பவும் கடமைப் பட்டிருக்கிறேன், என் நகைகளைத் தேடித்தந்து விட்டீர்கள்."

"தங்கள் பிழையும் சேர்த்து மாணிக்கம் செட்டியார் பத்தாயிரம் ரூபாய் தந்துவிட்டார் எனக்கு. அதோ கோவிந்தனும் வந்துவிட்டார், 'செக்' மாற்றிப் பணத்தைப் பாங்கியில் கட்டி விட்டு" என்றார் வேணு.

"கட்டி விட்டேன்" என்று கூறிக் கொண்டே உள்ளே வந்தான் கோவிந்தன்.

"செட்டியார்வாள்! நீங்கள் போகலாம். அலங்காரவல்லிக்குத் தங்கள் பையிலிருக்கிற இமிடேஷன் செட் நகைகளையே கொடுத்து விடுங்கள், போதும். இந்தக் கேஸ் ஞாபகார்த்தமாக நான் சீனத்து மரப்பாச்சியை வைத்துக் கொள்கிறேன்" என்றார் மிஸ்டர் வேணு.



பெண்:—கடைக்கார ஐயா, என் அப்பா உங்களுக்கு ஒரு அணு தர வேண்டுமா?

கடைக்காரன்:—ஆமாம்.

பெண்:—அப்படியானால் இந் தாருங்கள்.

கடைக்காரன் (வாங்கிக் கொண்டு):— குழந்தை! உங்க அப்பா யாரு?

பாப்பா மலர்

# சமுத்திர சுந்தரி

'ஸோமாஸ்'

சந்திரா

## 2. புயல் வீசியது

கப்பலின் மேல்தளத்தில் நின்ற ராஜகுமாரனைச் சுந்தரி எத்தனை நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள் என்று அவளுக்கே தெரியாது. அவனுடைய அழகில் ஈடுபட்டுத் தன்னையே மறந்து நின்ற சுந்தரி ஒரு பயங்கர சத்தம் கேட்டுத் தன் சுய நினைவை அடைந்தாள். அந்தச் சத்தம் எங்கேயிருந்து வந்தது என்று அறிந்து கொள்ள நாலாபுறமும் பார்த்தாள்; அவளுக்கு ஒன்றும் விளங்கவில்லை. அலைகள் தான் எழும்பி ஒன்றோடு ஒன்று மோதி 'ஓ' வென்று ஓலமிட்டுக் கொண்டிருந்தன.

வானத்தை நிமிர்ந்து பார்த்த சுந்தரி உண்மையிலேயே பயந்துதான் போய் விட்டாள். இதுவரையில் நீல நிறமாயிருந்த வானத்தில் எத்தனை கரிய மேகங்கள் படலம் படலமாகச் சூழ்ந்து விட்டன! சுந்தரிக்கு வானத்தைப் பார்க்கவே பயமா யிருந்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் 'விர், விர்' என்று வேகமாகக் காற்று வீச ஆரம்பித்தது. 'திடும், திடும்' என்று பயங்கரமாக இடி இடித்தது. சற்று முன் தன்னைப் பயமுறுத்திய ஓசை இடி ஓசைதான் என்று சுந்தரி அறிந்து கொண்டாள். அம்மாதான் ஏற்கெனவே அவளுக்கு இடியைப் பற்றிச் சொல்லி யிருக்கிறாளே!

சுந்தரியின் கண்ணைப் பறிக்கும்படி 'பளீர், பளீர்' என்று வான வீதியிலே மின்னல் மின்னியது. உடனே 'சோ' என்று மழை பெய்தது.

'இருட்டுவதற்கு முன்னால் நீல மாளிகைக்கு வந்துவிட வேண்டும்' என்று அம்மா கண்டிப்பாய்ச் சொன்ன வார்த்தைகள் அப்போதுதான் சுந்தரிக்கு நினைவு வந்தது. ஆனால் அதே சமயத்தில் சந்திரனைப் போன்ற ராஜகுமாரனது முகம் மனசில் தோன்றவே, அந்த எண்ணம் அடுத்த நிமிஷமே மறைந்து விட்டது.

பயங்கரமான காற்று எழுப்பிய கடல் அலைகள் மலை மலையாகக் கிளம்பி ஒன்றோடொன்று மோதின. ஆனால் சுந்தரியின் மனத்தில் நிலையாக இடம் பெற்றுவிட்ட ராஜகுமாரனின் முகம் மட்டும் அந்த அலைகளின் வேகத்தில் கொஞ்சமும் மறையவில்லை.

"ஐயோ, இந்தப் பயங்கரப் புயலுக்கும் மழைக்கும் அந்தக் கப்பல் எப்படித் தப்பிப் பிழைக்கும்! புயல் வீசினால் கப்பல் சமுத்திரத்தில் முழுகிப் போய்விடும் என்று அம்மா சொல்லியிருக்கிறாளே! அப்படிக் கப்பல் புயலில் அகப்பட்டு முழுகிப் போய்விட்டால்......" அதற்கு மேல் சுந்தரியால் நினைக்கவே முடியவில்லை. "ராஜகுமாரனின் கதி என்ன ஆகுமோ?" என்று நினைத்தபோது சுந்தரிக்கு வருத்தம் தாங்க முடியவில்லை. உடனே மோதும் அலைகளையும் கடும் மழையையும் பொருட் படுத்தாமல் கப்பலைக் கவனமாகப் பார்த்தாள்.

காற்றிலும் கடும் மழையிலும் அகப்பட்டுக் கொண்டு அந்தக் கப்பல் இப்படியும் அப்படியுமாகத் தத்தளித்தது. தென்னை மரத்தின் உயரத்துக்கு அலைகள் எழும்பி அந்தக் கப்பல்மீது 'படார் படார்' என்று மோதின.



இந்தக் கோரக் காட்சியினால் சுந்தரிக்கு என்னளவும் பயம் உண்டாகவில்லை. கடலிலே பிறந்து கடலிலே வளர்ந்து வரும் மீன் குட்டி எங்கேயாவது மழைக்கும் இடிக்கும் பயப்படுவது உண்டா? அதுபோலச் சுந்தரியும் கடலிலே பிறந்தவள்தானே? அவள் மட்டும் ஏன் பயப்படப் போகிறாள்?

இது என்ன ஆச்சரியம்! சுந்தரியின் உடம்பு இப்படி ஏன் நடுங்குகிறது? கடல் கன்னிகைகளுக்குக் குளிரே தெரியாதே! கப்பலில் ராஜகுமாரன் இருக்கும் பக்கம் பார்த்தல்லவா அவள் அப்படி நடுங்குகிறாள்!

ராஜகுமாரனை நினைத்துத் தான் அவள் மனம் வேதனைப் பட்டது. அவள் மன வேதனைக்கு ஏற்ப, காற்றும் மழையும் வரவர அதிகமாகிக் கொண்டேயிருந்தது. கப்பலில் இருந்தவர்கள் அபாய சமயத்தில் தங்கள் பாதுகாப்புக்காக வைத்திருந்த படகுகளை அவிழ்த்துவிட்டு அவற்றில் ஏறித் தப்ப முயன்றார்கள். ஆனால் அவர்கள் செய்த முயற்சி பலன் தரவில்லை. அந்தப் பயங்கர மழையும் காற்றும் தணிந்தால்தானே படகில் மனிதர்கள் போக முடியும்?

ஆகா! சுந்தரி எதை நினைத்து நடுங்கினாளோ அது நடந்து விட்டது!

பயங்கரச் சத்தத்துடன் கப்பல் தூள் தூளாக உடைந்தது. அதில் இருந்தவர்கள் என்ன ஆனார்கள் என்பதை அறிந்துகொள்ள முடியவில்லை. ராக்ஷஸ அலைகளுக்குள் அகப்பட்டுக் கொண்டவர்களைப் பற்றி எப்படித் தெரிந்துகொள்ள முடியும்?

சுந்தரி அலைகளுக்குள்ளே முழுகித் தேடினாள். அவள் யாரைத் தேடினாள்? ராஜகுமாரனைத்தான். சந்தேகமென்ன? முறிந்து போய்க் காற்றில் அகப்பட்டுக்கொண்டு தவித்த கப்பலின் பலகைகள் சுந்தரியின் தலையிலும் உடம்பிலும் மோதின.

அதையெல்லாம் சுந்தரி பொருட்படுத்தவில்லை. ராஜகுமாரனைத் தேடுவதிலேயே அவள் முழு கவனமும் இருந்தது.

எத்தனை நேரம்தான் ஒரு மனிதன் ஜலத்தில் நீந்திக்கொண்டிருக்க முடியும்? அதுவும் பயங்கரமான புயல் மோதும் அலை கடலில் நீந்துவது என்பது முடிகிற காரியமா?

ராஜகுமாரன் கை, கால்கள் சோர்வுற்று ஜலத்தில் திக்கு முக்காடிக் கொண்டிருந்தான். தான் இனிமேல் உயிர் தப்ப முடியாது என்ற எண்ணம் ராஜகுமாரனுக்கு நிச்சயமாக ஏற்பட்டுவிட்டது.

"ஐயோ, கப்பலில் என்னுடன் வந்த சேனாபதியும் படை வீரர்களும் மற்றும் உள்ள பரிவாரங்களும் இந்தக் கோரப் புயலில் என்ன ஆனார்களோ, தெரியவில்லையே! சந்தோஷமாகக் கடலில் பிரயாணம் செய்ய வந்த எனக்கு இந்தக் கதி ஏற்பட்டு விட்டதே! புயலில் சிக்குண்டு என் கப்பல் கடலில் முழுகிப்போன செய்தியை என் தாய் தந்தையர்கள் அறிந்தால் எவ்வளவு வருத்தப் படுவார்கள்!" என்று நினைத்து ராஜகுமாரன் கடல் நீரோடு தன் கண்ணீரையும் பெருக்கினான்.

ஆயிற்று, இன்னும் சில விநாடிகளில் ராஜகுமாரனும் முழுகிப் போய் விடுவான் என்னும் நிலைமை வந்தது. வரவர அவன் மனம் சோர்ந்து மூச்சுத் திணறி நினைவும் தப்பியது.

அந்த ஆபத்தான சமயத்தில் சுந்தரி அவனைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு காப்பாற்றினாள். கடல் கன்னிகைக்கு இது ஒரு பிரமாதமான காரியம் அல்ல.

தன் நினைவையிழந்து பேச்சு மூச்சில்லாமல் கிடக்கும் ராஜகுமாரனைப் பார்த்ததும் சுந்தரியின் கண்களில் கண்ணீர் பெருகியது. ஆகா! எத்தனை

அழகிய முகம்! இளமை ததும்பும் அவன் முகத்தில் தான் என்ன களை! இந்த அழகிய ராஜகுமாரனை எப்பாடு பட்டாவது கரைக்குக் கொண்டு போய்ச் சேர்த்து விட்டால், ஒரு தேசத்து ராஜாவைக் காப்பாற்றிய பெருமை தனக்குக் கிடைக்கும் அல்லவா? ராஜகுமாரன் விழித்தெழுந்து தன்னைக் காப்பாற்றியது யார் என்று தெரிந்தால் எவ்வளவு சந்தோஷப்படுவான்!

இந்த இன்ப நினைவுகளில் ஈடுபட்டு சுந்தரி தன் காரியத்தை மறந்துவிடவில்லை. அலைகளையும், விடாமல் அடிக்கும் மழைத் துளிகளையும் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் ராஜகுமாரனைத் தாங்கியபடி கரையை நோக்கிச் சென்றாள். வழியில் சுந்தரிக்கு ஒரு யோசனை தோன்றியது. எவ்வளவு தூரம் அவளால் ராஜகுமாரனைத் தாங்கிச் செல்ல முடியும்?

ஆகவே, மெதுவாக ராஜகுமாரனை, உடைந்த கப்பல் பலகையில் படுக்க வைத்தாள். பிறகு அந்தப் பலகையைத் தள்ளிக் கொண்டே போய், வெகு நேரம் நீந்திக் கரையை அடைந்தாள்; அங்கே மணலில் ராஜகுமாரனைப் பலகையோடு தள்ளினாள்.

* * *

சுந்தரி இந்தக் காரியத்தைச் செய்து முடிப்பதற்கும் பொழுது விடிவதற்கும் சரியாயிருந்தது. புயலும் மழையும் ஓய்ந்து சமுத்திரம் அமைதியாயிருந்தது; வானமும் மேகங்கள் இல்லாமல் அமைதியாயிருந்தது. சுந்தரியின் மனசிலும் அமைதி உண்டாயிற்று. கிழக்குத் திசையிலிருந்து சூரியன் வெகு வேகமாக வந்து கொண்டிருந்தான்.

சமுத்திரத்தில் ஸ்நானம் செய்து விட்டு எழும்பும் சூரியனைப் பார்த்துச் சுந்தரி மிகவும் சந்தோஷப்பட்டாள். ஆனால் அந்தச் சந்தோஷம் நீடிக்கவில்லை. "நேற்று மாலை நீல மாளிகையை விட்டுப் புறப்பட்டுப் பொழுது விடிந்த பிறகும் வீட்டுக்குப் போகவில்லையென்றால் அம்மா வருத்தப் பட்டுக்கொண்டிருப்பாளே!" என்ற நினைவு வந்தது சுந்தரிக்கு.

அடுத்த கணம் ராஜகுமாரனின் அழகிய முகம் அவள் மனத்தில் தோன்றி அவளை வாட்டியது. "ஐயோ, அந்த அழகனுக்கு ஒன்றும் நேராமல் இருக்க வேண்டுமே! அவன் எப்படியாவது உயிர் பிழைக்க வேண்டுமே!" என்று நினைத்து வருந்தினாள் சுந்தரி.

'ராஜகுமாரன் ஒருவேளை இறந்து விட்டானோ...!' இதைச் சுந்தரியினால் நினைக்கவே முடியவில்லை. அவன் எப்படியும் பிழைத்து எழுந்துவிடுவான் என்னும் நம்பிக்கை அவளுக்குப் பூரணமாக இருந்தது. ஆனால் அவன் எழுந்து உட்காரும் வரையில் அவளுக்கு மனம் நிலை கொள்ளாது என்று தோன்றியது. அவனை அந்த நிலையில் விட்டு விட்டுப் போக அவளுக்கு மனசு எப்படித்தான் வரும்? ஆகவே நீல மாளிகையைப் பற்றிய நினைவையே அவள் அடியோடு மறந்தாள்.

ராஜகுமாரனை விட்டுப் பிரிந்து உயிர் வாழ்வதென்பது சுந்தரிக்கு முடியாத காரியம் என்று தோன்றியது. ஆனால் அது நடக்கக் கூடிய காரியமா? நினைத்து நினைத்து மனம் புழுங்குவதைத் தவிர அவளால் வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை.

ராஜகுமாரனை நீல மாளிகைக்கு அழைத்துப் போகலாமே என்றால் அதிலும் ஒரு பெரிய கஷ்டம் இருந்தது. மனிதர்களால் ஜலத்தில் ஒரு நிமிஷம் கூட வாழ முடியாதே! சுந்தரியாவது ராஜ குமாரனோடு சேர்ந்து வாழலாம் என்றால், கடல் கன்னியாகிய



அம்மா:—ஏண்டா இன்னும் தூங்கவில்லை? நான் எத்தனை நேரமாகப் பாட்டுப் பாடுகிறேன்?

சிறுவன்:—இல்லை, அம்மா! நீ பாட்டை நிறுத்தியதும் தூங்கலாம் என்றிருக்கிறேன்!

அவள் மனிதர்களோடு வாழ முடியாதே! பாதி உடல் மீனாக இருக்கும் கடல் கன்னிகைகள் மனித உலகத்தில் நடமாட முடியாதே!

இப்படி எண்ணற்ற எண்ண அலைகள் அவள் மனதில் எழுந்து மோத, கடல் அலைகளுக்கு மத்தியில் கரை ஓரமாக ஜலத்திலே நீந்திக்கொண்டிருந்தாள். அவள் கவலையெல்லாம் கரையில் படுத்துக் கொண்டிருக்கும் ராஜகுமாரனிடமே இருந்தது.



பிரக்ஞையற்றுக் கிடந்த ராஜகுமாரன் சூரிய உஷ்ணம் அதிகம் ஆக ஆகக் கொஞ்சம் கொஞ்சமாக மூச்சு விட ஆரம்பித்தான். பிறகு சற்று நேரத்துக்கெல்லாம் ராஜகுமாரன் கண் விழித்துப் பார்த்தான். மிகுந்த சிரமத்துடன் எழுந்து மெதுவாக உட்கார்ந்தான். தான் எங்கே யிருக்கிறான் என்பதே அவனுக்குப் புரியவில்லை. நாலாபுறமும் திரும்பித் திரும்பிப் பார்த்தான்.

சமீபத்திலே இருந்து ராஜகுமாரன் முகத்தைப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்ததில் சுந்தரிக்கு அளவு கடந்த சந்தோஷம். அவளுக்குத் தெரியாமல் கடல் அலைகளுக்கு மத்தியில் இருந்து கொண்டு அவனது அழகிய முகத்தைப் பார்த்தாள். அவள் நெஞ்சு 'படக், படக்' என்று அடித்துக் கொண்டது. மேலே என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள மிகவும் ஆவலாயிருந்தாள். (தொடரும்)

# சமர்த்து ஜிம்மி!

அம்பியும் அவன் குடும்பத்தாரும் கிறிஸ்துமஸ் விடுமுறைக்குச் சென்னைக்குக் கிளம்பினார்கள். அம்பி, "அம்மா! நம்ம ஜிம்மியும் பட்டணத்துக்கு வரட்டுமே" என்று கெஞ்சினான். "அம்பி! நாயை ரயிலில் அழைத்துக் கொண்டு போவது சிரமம். வேண்டாம்!" என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டாள் அம்மா.

அம்மாவும் அப்பாவும் மூட்டை கட்டிக் கொண்டிருந்தார்கள். அம்பியும், அவன் தங்கை பட்டுவும் ஜிம்மியை எங்கெல்லாமோ தேடினார்கள். காணவில்லை. "ஜிம்மி எங்கேயும் ஓடிப்போய் விடாது. ஆபீஸ் பியூன் கண்ணனிடம் கவனித்துக் கொள்ளச் சொல்லியிருக்கிறேன். ஜிம்மிக்குக் கண்ணன் வீடு தெரியுமோ இல்லையோ! அவன் வீட்டுக்குப் போயிருக்கும். ரயிலுக்கு நேரமாகிவிட்டது!" என்று அப்பா அவர்களை அவசரப்படுத்தினார். எல்லோரும் ரயிலுக்குப் புறப்பட்டார்கள். அம்பிக்கு ஜிம்மி இல்லாதது பெருங்குறையாக இருந்தது.

மறுநாள் காலையில் அவர்கள் சென்னைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அவர்களுடைய தாத்தா, "என் குழந்தைகள் அழுமூஞ்சியாகவே இருக்கின்றனர்? அவர்கள் உற்சாகமாகவே இல்லையே?" என்று கேட்டார்.

"அவர்களுடைய ஜிம்மியைக் கூட அழைத்து வரவில்லை. அதனால் அவர்களுக்கு வருத்தம்" என்றாள் அம்பியின் அம்மா. பிறகு அம்பியின் தாயார் ஒரு கூடையைத் திறந்ததும் ஏதோ ஒன்று பொத்தென்று குதித்தது. அவள் திடுக்கிட்டுப் போய் 'ஹோ' வென்று அலறி விட்டாள். எல்லோரும் ஓடிவந்து பார்த்தார்கள். என்ன ஆச்சரியம்! பட்டு, அம்பி இருவரும் ஆரவாரித்தார்கள். ஏன் தெரியுமா? கூடையிலிருந்து பொத்தென்று குதித்தது அவர்களுடைய ஜிம்மிதான். ஜிம்மியைக் கண்டதும் அம்பியும் பட்டுவும் அடைந்த ஆனந்தத்துக்கு அளவில்லை. குழந்தைகள் சந்தோஷத்தைக் கண்டு யாவரும் மகிழ்ச்சியடைந்தனர். —பி. எஸ். மணி



நீங்கள் உங்கள் பற்களை

# இன்று மக்ளீன் செய்தீர்களா?




வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது

உமிழ்நீர்
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை யாரும் காப்பியடிக்க முடியாத பிரத்யேக முறையில் தயாரித்தது மிகவும் சுத்தமாயிருப்பதால் உலகமுழுவதும் பரவியுள்ளது. கறைகளைப் போக்கி வாயைச் சுத்தப்படுத்தி, உபயோகிப்பதற்கு மணமும் சுவையும் உள்ளதாக விளங்குகிறது

லக்ஷக்கணக்கான மக்கள் பிரதினமும் காலையில் மக்ளீன்ஸ் மூலம் தம் பற்களைச் சுத்தம் பண்ணுவதைப் பழக்கப்படுத்திக் கொண்டுள்ளனர்.

இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!



# எங்கள் ஊர்!

கோணல்

சொர்க்கம் போவதாயிருந்தால் மிகவும் சுலபம் என்பது என் அபிப்பிராயம்; ஆனால் எங்கள் ஊருக்கு வருவதாயிருந்தால் சிறிது கடினம். கடினம் என்றவுடனே பயப்பட்டு விடவேண்டாம். சிறிது கஷ்டத்தைப் பார்க்காமல் எங்கள் ஊருக்கு வந்து விட்டால், சொர்க்கத்தைவிட ஒரு சிறந்த இடம் இந்தப் பூமியின்கண் இருப்பதை எண்ணி உருகுவீர்கள்.

நீங்கள் எங்கிருந்து புறப்பட்டாலும் எங்கள் ஊருக்கு வருவதாகத் தீர்மானித்து விடலாம். நீங்கள் ரயில் மார்க்கமாய் வருவதாய் இருந்தால் 'கோட்டைவிட்டான்' ஸ்டேஷனுக்கு டிக்கெட் வாங்கிக்கொள்ள வேண்டும். அந்த ஸ்டேஷனில் ரயிலைவிட்டு இறங்கியதும் ஒரு தடவை நான்கு புறமும் உங்கள் கண்ணோட்டத்தைச் செலுத்துங்கள். எந்தப் பக்கம் பார்த்தாலும் பாலை வனம்போல ஒரே திடலாகத் தோன்றும். இதுதான் 'கோட்டைவிட்டான்' என்ற அந்த ஊருக்குள்ள தனி மகிமை! இந்தச் சந்தர்ப்பத்தில் 'கோட்டை விட்டான்' தான் எங்கள் ஊர் என்று நினைத்துக் கொள்ளக் கூடாது என்று எச்சரிக்கைசெய்கிறேன். 'கோட்டைவிட்டான்' ஸ்டேஷனில் இறங்கி உங்கள் பார்வையை நான்குபுறமும் செலுத்தியபின், இன்னும் ஒரு சிரமமான காரியமும் உண்டு. அதாவது அந்த இடத்தில் நின்றபடியே மேற்குத் திக்கு எது, வடக்கு எது என்று மாத்திரம் தெரிந்து கொள்ளுங்கள். கிழக்குத் திசையையும் தெற்குத் திசையையும் தெரிந்து கொள்ளாமல் விட்டு விடுவது மிகவும் நல்லது. மேற்கு, வடக்கு இரண்டும் எது என்று தெரிந்தவுடன் மேற்குத் திக்கை நோக்கி நடக்க ஆரம்பியுங்கள். அப்படியே கண்ணை மூடிக்கொண்டு ஒரு மைல் வாருங்கள். கண்ணைத் திறந்து கொண்டு வந்தாலும் குற்றமில்லை.

மேற்கே ஒரு மைல் வந்த பிறகு வடக்கே ஒரு ஒற்றையடிப் பாதை போகும். அந்தப் பாதையில் திரும்பி வடக்கே ஒரு மைல் நடந்து வாருங்கள். மறுபடியும் மேற்கே திரும்பி ஒரு மைல் நடந்து வாருங்கள். அப்புறம் வடக்கே திரும்பி ஒரு மைல்...... இப்படியே மேற்கிலும் வடக்கிலும் மைலுக்கு ஒரு தடவை வீதம் ஒன்பது தடவை திரும்பித் திரும்பி நடந்துவந்தால் வெகு சுலபமாக எங்கள் ஊரைப் பிடித்து விடலாம். ஒன்பது திருப்பங்களிலும் திசை தப்பாமல் திரும்பி நடந்து வந்தோமா என்பது முக்கியமாக ஞாபகத்திலிருக்க வேண்டிய விஷயம்.

மேற்கையும் வடக்கையும் மறந்து கிழக்கிலோ தெற்கிலோ நடந்துவிட்டால் ஒரு அபாயம் இருக்கிறது. அதாவது நீங்கள் எங்கள் ஊருக்கு வருவதற்குப் பதிலாகப் 'போத்தியம்மன்' காட்டுக்கோ 'பொன்னியம்மன்' காட்டுக்கோதான் போய்ச் சேருவீர்கள். இந்தக் காடுகளில் எந்தக் காட்டுக்கு நீங்கள் போய்ச் சேர்ந்தாலும் சரி, எங்கள் ஊருக்கோ வேறு எந்த ஊருக்கோ நீங்கள் திரும்பிவர முடியாது. கெட்டிக்காரர்களாக இருந்தால் அந்தக் காட்டில் உள்ள துஷ்ட மிருகங்களின் வாயில் அகப்படாமல் காட்டுக்குள்ளேயே சுற்றிக் கொண்டிருக்கலாம்.

இப்படியாகத் திசைத்திருப்பங்களை யெல்லாம் கவனமாக எண்ணிக்கொண்டு நீங்கள் உருப்படியாக வந்து சேர்ந்தபின் இரண்டு புண்ணிய நதிகளைக் கடக்கும் பாக்கியமும் உங்களுக்குக் கிடைக்கும். இந்தப் புண்ணிய நதிகளின் விசேஷம் என்னவென்றால் அவைகளில் யுகத்திற்கு ஒரு தடவை தண்ணீர் வருவதுதான். அதாவது அந்த ஆறுகளில் ஏதாவது ஒன்றில் தண்ணீர் வந்து விட்டால் கலியுகம் மறைந்து திரேதாயுகம் ஆரம்பமாகிவிட்டது என்று நாம் திடமாக நம்பலாம்.

இந்த ஆறுகளில் முதலில் உங்கள் கண்ணில் படுவதற்குக் 'கொடுத்து வைத்தான்' ஆறு என்றும் இரண்டாவதற்கு 'அடித்துப் பறித்தான்' ஆறு என்றும் திருப்பெயர்கள். இந்தப் பெயர்கள் எந்த யுகத்தில் வைக்கப் பட்டதோ! ஆனால் இந்தப் பெயர் ஏற்பட்டதற்கு வாய்மொழியாக வந்த ஒரு கதை உண்டு. யாரோ ஒரு தேச சஞ்சாரி எங்கள் புகழ் சிறந்த புண்ணிய ஸ்தலத்தைத் தரிசிக்க வந்தபொழுது 'கொடுத்து வைத்தான்' ஆற்றில் இறங்கி நடந்தானாம். திடீரென்று அவன் எதிரில் ஏதோ ஒரு தேவதை தோன்றி இரண்டு பெரிய தவலை நிறையப் பவுன் காசுகளைக் கொண்டுவந்து கொடுத்ததாம். அவன் அவைகளைச் சுமக்கமாட்டாமல் சுமந்து கொண்டு 'அடித்துப் பறித்தான்' ஆற்றில் இறங்கி நடந்தபொழுது யாரோ

ஒரு ராட்சதன் வந்து அவனை அடித்துக் கொன்றுவிட்டுப் பொற்காசுகள் நிரம்பிய அந்தத் தவலைகளை எடுத்துக்கொண்டு ஓடி விட்டானாம். எதற்காகத் தேவதை தோன்றி அந்தத் தேச சஞ்சாரிக்கு அந்தப் பொற்காசுகள் நிரம்பிய தவலைகளைக் கொடுத்தது? எதற்காக ஒரு ராட்சதன் அவனைக் கொன்று அவைகளை எடுத்துக் கொண்டு ஓடினான் என்பதெல்லாம் கதைக்குள்ளே கண்டும் காணாமலும் மிளிரும் பொருளைத் தெரிந்து தெளிய வேண்டிய விஷயம். பொதுவாக அந்த ஜலம் காணாத நதிகளுக்கு ஏற்பட்ட பெயர்கள் ஒரு கதை கட்டுவதற்கு சௌகரியமாய் அமைந்திருக்கிறது என்பதுதான் அதி விசேஷமானது.



'அடித்துப் பறித்தான்' ஆற்றைக் கடந்து கரை ஏறிப் பார்த்தால் எங்கள் ஊர் பளிச்சென்று உங்கள் கண்களில் பட்டு உள்ளத்தில் ஒரு உவகையைக் கிளறிவிடும். உங்களுக்கு உவகை தோன்றாவிட்டால் உங்களுக்கு உள்ளம் உண்டா இல்லையா என்பதில் சந்தேகப்பட வேண்டியதுதான். இல்லாவிட்டால் உங்கள் உள்ளம் உவகை அடைவதில் பயிற்சி பெறவில்லையென்றுதான் அர்த்தம்.

எங்கள் ஊரைக் கண்டவுடன் உள்ளத்தில் உவகை தோன்றுவதற்குக் காரணம் என்னவென்றால் எங்கள் ஊர் உங்கள் கண்களுக்கு ஊராகவே தோன்றாது என்பதுதான். எங்கள் ஊரில் இரண்டு இடிந்த கோயிலும் பதினைந்து வீடுகளும் உண்டு. இந்த இரண்டு கோயில்களில் ஒன்று பெருமாள் கோயில் மற்றொன்று சிவன் கோயில். இந்த இரண்டு கோயிலிலும் உள்ள தெய்வங்கள் அசாத்தியமான மகாத்மியம் பொருந்தியவைகள். அந்த இரண்டு தெய்வங்களும் தாங்கள் குடியிருக்கும் கோயில்கள் இடிந்து உருக்குலைந்து க்ஷீணதசையை அடைந்து விட்டது குறித்தோ, அல்லது தங்களுக்கு ஒருவரும் பூஜை நைவேத்தியம் செய்வதில்லையே என்பது பற்றியோ கவலைப் படுவதே இல்லை. தீவிரமான உண்ணாவிரதிகள். இதுவே அவர்களின் பெரிய மகாத்மியம். எங்கள் ஊரில் உள்ள பதினைந்து வீடுகளில் எட்டு வீடுகள் பூராவும் இடிந்து தரைமட்டமானவைகள். பாக்கி உள்ள ஏழு வீடுகளில் நான்கு அரைகுறையாக இடிந்து பாழடைந்து போன வீடுகள். பாக்கியுள்ள மூன்று வீடுகள் ஜனநடமாட்ட முள்ளவைகள். இந்த மூன்று வீடுகளில் ஒன்றுதான் எங்கள் வீடு. எங்கள் வீடுகளையும் கோயில்களையும் சுற்றிச் சிறு சிறு பச்சைக் குன்றுகள் போல் நாகதாளிப் புதர்கள் சர்வ சுதந்திரத்துடன் இயற்கை விட்ட வழியாக வளர்ந்திருப்பதே ஒரு கண்கொள்ளாக் காட்சிதான். இந்த நாகதாளிப் புதர்களைத் தவிர அமோகமாக விளையும் வேறு பொருள்கள் ஒன்றுமே எங்கள் ஊரில் இல்லை. இந்த நாகதாளியையே நாங்கள் ஆகாரமாகக் கொள்ள முடியாத குறையினால் ஆகாரத்திற்காக வெளியூர்களுக்குச் சென்று தானியம் வாங்கிவர வேண்டிய சிரமம் எங்களுக்குச் சிறிது இருந்தது.

இவ்வளவு நேரம் எங்கள் ஊரைப்பற்றிச் சொல்லிவிட்டு ஊரின் பெயரைச் சொல்லாதது பெருங் குறையல்லவா? எங்கள் ஊருக்கு ஒரு பெயர் இருந்தால் சுலபமாகச் சொல்லிவிடலாம். எங்கள் ஊருக்கு மூன்று பெயர்கள் 'பள்ளிகொண்டான் பாளையம்' என்பார்கள் சிலர். 'பன்றி கொன்றான் பாளையம்' என்பார்கள் சிலர். சிலர் 'பண்ணிக் கிட்டான் பாளையம்' என்பார்கள். இதில் எது பொருத்தமான பெயர் என்று சொல்லுவது சிரமம். இந்த மூன்று பெயர்களில் 'பள்ளிகொண்டான் பாளையம்' என்பதற்கும், 'பன்றி கொன்றான் பாளையம்' என்பதற்கும் தகுந்த காரணம் காட்டக் கதைகள் இருந்தன. அந்தக் கதைகளை நம்புவதற்குச் சாட்சியமாகச் சிவன் கோயிலும் பெருமாள் கோயிலும் விளங்கின.

ஒரு சமயம், வைகுண்டபதியாய் இருந்த ஸ்ரீமந் நாராயணனிடம் கோபித்துக்

கொண்டு பிறந்தகத்திற்குப் போய் விட்டாளாம் லக்ஷ்மி. மகா விஷ்ணுவுக்குத் தன் பாரியாளின் பிறந்தகம் எது என்று தெரியாமையால் மகா லக்ஷ்மியைத் தேடி உலகமெல்லாம் சுற்றி அலைந்து அவளைக் காணுமல் கடைசியாக எங்கள் ஊருக்கு வந்தாராம். லக்ஷ்மிகரம் தாண்டவமாடும் எங்கள் ஊரைக் கண்டதும் இந்த ஊரில்தான் தன் பாரியாளின் பிறந்தகம் இருக்கவேண்டும் என்ற நம்பிக்கையோடு இங்கேயே தங்கி விட்டாராம். திருமகளைத் தேடிப் பல இடங்களில் சுற்றி அலைந்த களைப்பினால் அப்படியே பள்ளிகொண்டு விட்டாராம். அவர் மறுபடியும் மகாலக்ஷ்மியைப் பார்த்தாரோ இல்லையோ, பள்ளிகொண்ட ஆசாமி எழுந்திருக்கவே இல்லை. இதனால்தான் எங்கள் ஊருக்குப் 'பள்ளிகொண்டான் பாளையம்' என்று பெயர் வந்தது என்பது ஒரு சாரார் முடிவு. ஆனால் இன்னொரு சாராரின் வாதத்தையும் கேட்க வேண்டுமல்லவா?

ஒரு சமயம் அர்ச்சுனன் பாசுபதாஸ்திரத்திற்காகப் பரமேசுவரனைக் குறித்துப் படு தவம் கிடந்தது எங்கள் ஊரில் தானாம். அப்பொழுது பரமசிவன் கிராதன் வேடத்தில் தோன்றி ஒரு காட்டுப் பன்றியைக் கொன்றாராம். அதனால் தான் எங்கள் ஊருக்குப் 'பன்றி கொன்றான் பாளையம்' என்று பெயர் வந்ததாகச் சொல்கிறார்கள் இன்னொரு சாரார்.

இந்த இரு சாரார் வாதத்தையும் கேட்டு நாம் தெளிவடைந்து விட முடியாது. 'பண்ணிக்கிட்டான் பாளையம்' என்று சொல்லும் மூன்றாவது சாரார் விஷயத்திலும் நாம் அனுதாபப்பட வேண்டியது அவசியம். அவர்களுக்கு ருசுப்படுத்திக் காட்ட ஒரு கதையும் இல்லாதது துரதிருஷ்டம்தான். ஆனால் அதை அப்படியே விட்டுவிடக் கூடாது! அவர்களுக்கு ஆதாரமாகப் 'பண்ணிக் கிட்டான் பாளையம்' என்பதற்குப் பொருத்தமாக நாமாக ஒரு கதையைச் சிருஷ்டி செய்துதான் ஆக வேண்டும் என்று எனக்கு ஆர்வம் ஏற்பட்டது. தீவிரமாக ஆலோசித்து ஒரு பிரமாதமான கதையும் சிருஷ்டித்து விட்டேன்.

'பண்ணிக்கிட்டான்' என்ற வார்த்தை கிராமிய மக்களின் பாஷையில் 'பண்ணிக் கொண்டான்' என்ற வார்த்தையிலிருந்து மருவி வந்ததாகவோ, மழுவி வந்ததாகவோதான் கொள்ள வேண்டும். 'பண்ணி' என்ற வார்த்தையைப் பார்த்தால் யாரோ ஒருவன் யாரோ ஒரு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொண்டான் என்பதாகத்தான் இருக்க வேண்டும்; அல்லது தற்கொலை பண்ணிக் கொண்டான் என்றாவது இருக்க வேண்டும். இந்த இரண்டையும் தவிர வேறு எதுவும் எனக்குப் பொருத்தமாகப் படாததால், கல்யாணம், தற்கொலை இரண்டையுமே வைத்து, 'பண்ணிக்கிட்டான் பாளையம்' என்பதற்குப் பொருத்தமாக ஒரு கதையைக் கட்டினேன். இதோ அந்தக் கதை:

முன்னொருகாலத்தில் நம் தமிழ்நாட்டை ஒரு குடையின் கீழ் ஆண்ட மன்னன் ஒருவன் (அவன் பெயரைப் பின்னால் யோசித்துச் சொல்லுகிறேன்) எங்கள் ஊருக்கு வேட்டையாட வந்தான். மன்னன் வேட்டையாடக் காட்டுக்குப் போகாமல் எங்கள் ஊருக்கு வந்த காரணம் என்னவென்றால் காட்டு மிருகங்கள் அவன் வேட்டையாடுவதற்கு இடையூறாக இருந்ததுதான். எங்கள் ஊரில் மனிதர்களைத் தவிர வேறு மிருகங்கள் வேட்டையாடுவதற்கு அவன் கண்ணில் படாததால் சுற்றிச் சுற்றித் தேடிக் கடைசியில் ஒரு தடாகக் கரையில் வந்து களைப்போடு படுத்துக் கொண்டான். எங்கள் ஊரில் ஒரு தடாகம் இருக்கிறதா என்று யாராவது கேட்கலாம்: ஆனால் தண்ணீர் இல்லாத ஊரில் எந்தப் பள்ளத்தைக் காட்டினாலும் அது தடாகமில்லை என்று தைரியமாக மறுக்க முடியாதல்லவா?



ஆகவே கதையை மேலே சொல்கிறேன். தடாகக் கரையில் படுத்துக் கொண்ட மன்னன் அலைந்த களைப்பினால் அவனையறியாமல் நித்திரையிலாழ்ந்து விட்டான். மாலையில் வந்து படுத்தவன் இரவு வெகு நேரம் வரையில் நித்திரை கலைந்து எழுந்திருக்கவில்லை. நடுநிசியில் யாரோ அவனை வந்து எழுப்பவே திடுக்கிட்டு எழுந்தான். அவன் எதிரில் அழகான பெண் ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். அவள் ரம்பையோ ஊர்வசியோ என்று மன்னன் பிரமிப்படைந்

தான். அவன் அழகில் சொக்கி அவள் மீது எல்லையற்ற மோகம் கொண்டான். அந்த அழகி யும் அவன் மீது மோகம் கொண்டாள். அப்புறம் கேட்க வேண்டுமா? மன் னன் அவளைத் தன்னோடு தன் ராஜ்யத்திற்கு அழைத் துப் போய் மிகவும் ஆடம் பரமாக விவாகம் செய்து கொள்வதாகச் சொன் னான். ஆனால் அந்தப் பெண் தன்னை அப்பொ ழுதே காந்தர்வ விவாகம் செய்து கொள்ள வேண்டும் என்று வற் புறுத்தினாள். மன்னவனும் அவள் மீது கொண்ட எல்லையற்ற மோக லாகிரியில் மயங்கி அவளது பிடிவாதத்திற்கு இணங் கினான். தன் மோதிரத்தைக் கழற்றி அவள் கையில் அணிவித்துக் காந்தர்வ விவா கம் செய்து கொண்டான். அன்று இரவு அவனுக்கு மிக இன்பமாகவே கழிந்தது.



மறுநாள் காலையில் மன்னன் கண் விழித்துப் பார்த்த பொழுது, தன் ஆசைக் காதலியைக் காணாமல் திடுக்கிட்டான். பித்துப் பிடித்தவன் போல் எங்கெங்கோ தேடி அலைந்தான். கடைசியில் ஊரில் உள்ள வர்கள் மூலம் அந்தத் தடாகக் கரையில் ஒரு மோகினிப் பிசாசு இருப்பதாகவும், அந்தப் பிசாசு யாரையாவது கல்யாணம் செய்து கொள்ள வேணும் என்ற ஆசையில் துடித் துக் கொண்டிருந்ததாகவும், அந்தப் பிசாசு தான் மன்னனை ஏமாற்றிக் காந்தர்வ முறை யில் கல்யாணம் செய்து கொண்டிருக்க வேண்டு மென்றும் சொன்னார்கள். இதைக் கேட்டதும் மன்னனுக்குத் துக்கமாகவும் அவமானமாகவும் இருந்தது. 'நாம் மன்னாதி மன்னனாய் இருந்தும் ஒரு மோகினிப் பிசாசு விரித்த வலையில் விழுந்து, அதைக் கல்யா ணம் செய்துகொண்டு விட்டோமே' என்ற அவமானம் தாங்க முடியாமல், அந்தப் பிசாசு இருக்கும் தடாகத்திலேயே விழுந்து தற் கொலை செய்து கொண்டான்.

இந்தக் கதையில் 'பண்ணிக்கிட்டான்' அதாவது 'பண்ணிக் கொண்டான்' என்ற சொல்லுக்குப் பொருத்தமாகக் கல்யாணம் பண்ணிக் கொண்டான், தற்கொலை பண்ணிக் கொண்டான், என்ற இரண்டு காரணம் இருக்கின்றன அல்லவா? கல் யாணம் பண்ணிக் கொண்டான் என்பதை யாராவது மறுத்தாலும் தற்கொலை பண்ணிக் கொண்டான் என்பதை யாவது ஒப்புக்கொள்ளத் தான் வேண்டும். தற் கொலை பண்ணிக் கொண் டான் என்பதை ஒப்புக் கொள்ளா விட்டாலும், கல்யாணம் பண்ணிக் கொண்டான் என்பதை யாவது ஒப்புக்கொள்ளத் தானே வேண்டும்?

எங்கள் ஊரின் மகிமை யைப்பற்றி நான் தெள்ளத் தெளியச் சுருக்கச் சொல்லி விளக்க வைத்து விட்டேன் என்பது என் அபிப்பிராயம். எங்கள் ஊரைப் பார்க்க விரும்புகிறவர் எல்லோரும் தாராளமாகப் போய்ப் பார்க்கலாம். ஆனால் எங்கள் ஊரைப் பார்ப்பதோடு என்னையும் அங்கே பார்க்கலாம் என்று நினைத்தால் அது பெரும் தவறாகும். நானே எங்கள் ஊரைப் பார்த்து இருபது வருஷங்களுக்கு மேலாகின்றது. இப்பொழுது எங்கள் ஊரிலுள்ள இரண்டு கோயிலும் மூன்று வீதிகளும் அப்படியே இருக்கின்றனவா அழிந்து விட்டனவா என்பதோ, அங்கு மனித நடமாட்டம் உண்டா, இல்லையா என்பதோ எனக்குத் தெரியாது. ஆனால் ஒன்று கோயில்களையும் வீடுகளையும் நீங்கள் பார்க்கமுடியாவிட்டாலும் வானோங்கி வளர்ந்து நிற்கும் நாகதாளிப் புதர்களையாவது கண்குளிர நிச்சயம் காணலாம்.



பெண்மணி:—இந்தா! இந்தச் சட்டையை எடுத்துக் கொள். அதைக் கொஞ்சம் கிழிந்த இடங் களில் தைத்து விட்டால் போட்டுக் கொள்ளலாம்!

பிச்சைக்காரன்:—அம்மா! அப்படி யானால் ஊசியும் நூலும் கொண்டு வந்து தரட்டுமா?

# அன்புள்ள ராஜம்

**விஜயம்**

அன்புள்ள விசாலம்,

உன் கடிதம் கிடைத்தது. விஜய வாடாவில் நீ சந்தோஷத்தோடு இருப்பாய் என்றல்லவா நினைத்தேன்? உன்னுடைய கணவருக்கு நல்ல சம்பளம் வருகிறது என்று கேள்விப்பட்டேன். நீ உன் சந்தோஷ வாழ்க்கையைப் பற்றி ஒரு வரி கூடக் குறிப்பிடவில்லையே!

மாமியார், மாமனார், நாத்தனார் என்று ஒரு பிக்கல் பிடுங்கலும் இல்லாமல் நீ உன் கணவரோடு தனிக் குடித்தனம் செய்கிறாய். அப்படியிருக்க உனக்கு மனக்குறை இருக்க நியாயமே இல்லையே!

என் கணவர் எனக்கு நிறைய நகை பண்ணிப் போட்டிருப்பது என்னவோ வாஸ்தவம். "பவுன் விலை, மிளகு விலை, வெல்ல விலையாக ஏறிக் கிடக்கும் போது உன் புருஷர் உனக்கு நகை பண்ணிப் போட்டிருக்கிறாரே!" என்று ஆச்சரியப்பட்டு எழுதியிருக்கிறாய். ஆமாம். அவர் ஆசையோடு பண்ணிப் போட்ட நகைகளைத்தான் நான் போட்டுக் கொண்டிருக்கிறேன். இதைப் பற்றிய உண்மையை நீ தெரிந்து கொள்ளுவதற்கு முன்னால் புருஷர்களைப் பற்றிய ஒரு பொதுவான விஷயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும். அதாவது, புருஷர்களுக்கு எப்போதுமே ஒரு குறை உண்டு. அவர்கள் தாங்களாக எதையும் தெரிந்து கொள்ள மாட்டார்கள். தெரிந்து கொள்ளும் சக்தியும் கிடையாது என்று நான் துணிந்து சொல்லுவேன். நமக்கு ஏதாவது வேண்டுமானால் நாம்தான் அவர்களைத் தூண்டிப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

நானும் என் கணவரும் போன மாதம் அங்கே வந்திருந்த போது, "உனக்கு எப்படி இத்தனை நகைகளும் புடவைகளும் கிடைத்தன?" என்று அதிசயத்துடன் கேட்டாய். அப்போது 'அவர்' கூடவே இருந்த படியினால் இதைப் பற்றியெல்லாம் விவரமாக உனக்கு ஒன்றும் சொல்ல முடியவில்லை. இப்பொழுது உன் கடிதத்தில் அதைப் பற்றிப் பிரஸ்தாபித்திருக்கிறாய். உன் கடிதத்தைப் படித்தால் எனக்கு உன்னிடம் அநுதாபம்தான் உண்டாகிறது.

"நீ மிகவும் அதிர்ஷ்டசாலி. உனக்கு ஒரு குறையும் இல்லை. வேண்டிய நகை நட்டுக்களும் அணி மணிகளும் இருக்கின்றன. என் புருஷருக்கு நல்ல சம்பளம் வந்தும் ஒரு நல்ல புடவைக்கோ, புதிய நகைக்கோ வழியைக் காணோம்! எல்லாவற்றுக்கும் கொடுத்து வைத்திருக்கவேண்டாமா? நான் ஒரு அதிர்ஷ்டக் கட்டை. சமையற்காரி மாதிரி உழைக்கிறேன். அவ்வளவுதான்!" என்று எழுதியிருக்கிறாய். உன் கடிதத்தைப் படித்ததும் எனக்குச் சிரிப்புத்தான் வந்தது.

அடி அசடே, விசாலம்! நான் சொல்லுவதைக் கொஞ்சம் கவனித்துக் கேள். கொஞ்சம் சாமர்த்தியம் மட்டும் இருந்தால் போதும். பெண்கள் எதை வேண்டுமானாலும் பெற்றுவிடலாம். நான் பெருமை அடித்துக் கொள்ளுவதாக நீ நினைத்தாலும் சரிதான். நான் சாமர்த்தியக்காரி என்பதில் எனக்குத் துளிக்கூடச் சந்தேகம் இல்லை. அதனால் தான் நான் அதிர்ஷ்டம் உள்ளவளாக இருக்கிறேன். அதிர்ஷ்டம் நம்மைத் தேடிக் கொண்டு வராவிட்டால் நாம்தான் அதிர்ஷ்டத்தைத் தேடிக்கொண்டு போய்ப் பிடிக்கவேண்டும்.

ஒன்று சொல்லுகிறேன், கேள். ஒரு பொருள் இல்லாதபோதுதான் நமக்கு அதனுடைய மதிப்புத் தெரிகிறது. மனைவி சதா சர்வகாலமும் புருஷனோடு இருந்து கொண்டு சமைத்துப் போட்டு, அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து வந்தால் மட்டும் புருஷனுடைய அன்பைச் சம்பாதித்து விட முடியாது; நாலு மாதங்களாவது மனைவி பிறந்தகத்துக்குப் போயிருந்தால்தான் புருஷனுக்குத் தன் மனைவியின் அருமை தெரியும்.


சந்திரா.

'ஐயோ, அவள் இருந்தால் சாப்பாட்டுக்குக் கஷ்டம் இருக்காதே! அப்பப்பா! அவள் எனக்காக என்னென்ன காரியங்கள் எல்லாம் செய்து வந்தாள்!

வேலைக்காரி கூட அந்த மாதிரி உழைக்க மாட்டாளே! பாவம், அவளுக்கு நல்ல புடவைகூட இதுவரை வாங்கித் தந்த இல்லையே? ஏதாவது ஒரு நகை பண்ணிப் போட்டிருப்பேனா?" என்று நினைத்து உருகுவார்; பிறகு அவர் அவளுக்குப் புடவையோ நகையோ நிச்சயம் வாங்கித் தருவார். கதைகளில் வருவது போல் உண்மைக் காதலும் ஏற்படும். ஸ்ரீ ராம பிரானுக்குக் கூடச் சீதா தேவியைப் பிரிந்திருந்த காலத்தில்தான் அவளது அருமை தெரிந்ததாம்.

ஆகவே ஆறு மாதங்களுக்கு ஒரு தடவை என் கணவரிடம் சென்று "ஊருக்குப் போய் அம்மாவைப் பார்க்க வேண்டும் போல் ஆசையாயிருக்கிறது. அம்மா என்னிடம் தன் உயிரையே வைத்திருக்கிறாள். நான் போனால் ஏதாவது புதுப்புடவையோ நகையோ பண்ணிப் போடாமல் அனுப்ப மாட்டாள்......!" என்று ஆரம்பிப்பேன்.

இதைக் கேட்டதும் என் புருஷர் கதி கலங்கிப் போய்விடுவார்.

"இதற்காக நீ பிறந்தகத்துக்குப் போக வேண்டுமா, ராஜம்! ரொம்ப நன்றாயிருக்கிறது! நானே உனக்கு எல்லாம் வாங்கித் தருகிறேன். நீயும் ஊருக்குப் போகவேண்டாம். நானும் இங்கே சோற்றுக்குத்தாளம் போட வேண்டாம்!" என்று சொல்லி விட்டு மறுநாளே ஏதாவது நகைக்கோ புடவைக்கோ ஏற்பாடு செய்வார்.

என்னிடம் இருக்கும் அத்தனை புடவைகளும் நகைகளும் இந்த மாதிரி ஏற்பாட்டின் மூலம் தான் வந்தன.

எல்லாவற்றுக்கும் கொஞ்சம் சாமர்த்தியம் வேண்டும். நான் சொல்லுகிறபடி நீ நடந்து பார்! நிச்சயம் பலன் ஏற்படும். பிறந்தகத்துக்குப் போனதும் மறந்து விடாமல் கடிதம் எழுது.

ராஜம்.

★

அன்புள்ள ராஜம்,

உன் கடிதம் கிடைத்தது. இப்போது இருக்கும் என் மன நிலையில் எனக்குப் பைத்தியம் பிடித்து விடும் போல் இருக்கிறது. பிறந்தகத்துக்கு வந்து ஒரு வாரம் ஆகியும் நான் உனக்குப் பதில் போடாததற்குக் காரணம் இதுதான்.

ராஜம், உன் அற்புதமான யோசனை இப்படி என்னைக் கதிகலங்க வைக்கும் என்று நான் எதிர் பார்க்கவில்லை. உன் யோசனை படிப்பதற்கு என்னவோ நன்றாய்த்தான் இருந்தது. என் புருஷரிடம், "அம்மாவைப் பார்த்து ரொம்ப நாளாகி



"என்னடா இது? போயும் போயும் பீப்பாயைத் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்திருக்கிறாயே!"

"வெறும் பீப்பாய் இல்லையடா! உள்ளே நிறையப் பஞ்சு அடைந்திருக்கிறது!"

விட்டது. நான் பிறந்தகத்தி லிருந்து திரும்பி வரும்போது அம்மா என்னை ஒரு காலும் சும்மா அனுப்ப மாட்டாள். ஏதாவது ஒரு நல்ல நகை பண்ணிப் போடுவாள்.....!" என்று ஆரம்பித்தேன்.

அவ்வளவு தான். நான் முற்றிலும் எதிர்பாராத விதமாக அவர் பதில் அளித்தார்.

"விசாலம், அது நல்ல யோசனை. நானே உன்னை அனுப்பலாம் என்று பார்த்தேன்! ஆறு ஏழு பவுனில் நல்ல மாதிரியில் ஒரு சங்கிலியோ, அல்லது வேறு ஏதாவது நகையோ செய்துகொண்டு நிதானமாகப் புறப்பட்டு வா. அவசரம் இல்லை. நான் சமையல் செய்து சாப்பிட்டுக் கொள்ளுகிறேன். கொஞ்ச நாளைக்குச் செலவும் குறையும். அதோடு இன்ஷ்யூரன்ஸ் பிரீமியம் வேறு கட்டவேண்டும். நீ சங்கிலிசெய்து கொண்டு வந்தால் அதைக் கொண்டு ஏதாவது ஏற்பாடுசெய்து கொள்ளலாம்!" என்று புளகாங்கிதத்துடன் அன்பு ததும்பப் பேசி என்னை அன்று இரவே ரயிலேற்றி அனுப்பி விட்டார்.

ராஜம், நான் என்னத்தையடி செய்வேன்? இப்பொழுது என் தகப்பனார் ரிடையராகி விட்டபடியினால் அவரால் நகை, கிகை ஒன்றும் செய்து போட முடியாது. ஏதாவது கொஞ்சம் ஒத்தாசை செய்வார். உன்னை என் கூடப் பிறந்தவள் மாதிரி நினைத்துக் கேட்கிறேனடி, ராஜம்! நீ எனக்கு ஐந்நூறு ரூபாய் பணம் அனுப்பி வை. நான் என் கணவரிடம் போனதும் அப்படியும் இப்படியுமாகச் சேர்த்து மெள்ள மெள்ளக் கொடுத்து விடுகிறேன். நகை போட்டுக் கொள்ள யோசனை சொல்லித் தந்த நீதான் அதற்கும் வழி செய்து தர வேண்டும். மறந்து விடாதே. நீ சாமர்த்தியசாலி. என்னைக் கைவிட மாட்டாய் என்று நம்புகிறேன்.

விசாலம்



# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 18. வாழப் பிறந்தோம்

"நல்லதோர் வீணை
செய்தே அதை
நலங்கெடப் புழுதியில்
எறிவதுண்டோ!"

என்று கவியரசர் பாரதியார் பராசக்தியைக் கேட்கின்றார். மானிட தேகத்தையும், வீணையையும் ஒப்பிடுவது மிகப் பொருத்தம். வீணைக்கு முப்பத்திரண்டு மெட்டுகள் இருக்கின்றன. மானிட தேகத்தைத் தாங்கும் மேரு தண்டத்திற்கும் முப்பத்திரண்டு எலும்புகளிருக்கின்றன.

தன்னுடைய புஜபல பராக்கிரமத்திலும், தபோ பலத்திலும் கர்வங் கொண்ட, தசகண்ட ராவணன் கைலயங்கிரியைத் தூக்கினான். பரமசிவன் தன் கால் கட்டை விரலால அழுத்தினார். ராவணன் பர்வதத்திற்கு அடியில் அகப்பட்டு நசுக்குண்டான். பிறகு கர்வம் தணிந்து, புத்தி தெளிந்து, தன் சரீரத்திலிருந்து மேரு தண்டத்தை எடுத்து முப்பத்திரண்டு மெட்டுகளை அமைத்து, ஒரு தலையைக் கிள்ளி இணைத்து, நரம்புகளால் தந்திகளை அமைத்து, அவைகளை மீட்டி, ஈசுவரன் மேல் சாமகானம் பாடினான். ஈசுவரன் இரக்கங் கொண்டு ராவணனை விடுவித்தார் என்று கதையில் படிக்கிறோம்.

சரீரத்திலிருந்து முதுகெலும்பை எடுக்க லாவது? நரம்புகளால் தந்திகளை அமைக்கவாவது? இவைகள் எல்லாம் நடக்கக் கூடியனவா? எல்லாம் சுத்த மோசம் என்று மகா காவியமாகிய ராமாயணத்தையே கொளுத்தக் கிளம்பி விடுவார்கள்.

அதன் உள் அர்த்தம் என்ன? அதன் தத்துவம் என்ன என்று சற்று நிதான புத்தியுடன் சிந்தித்தால்தான் அதன் உண்மையான மகத்துவம் தெரியும்.

முதுகெலும்பை எடுத்து விட்டால் பிழைக்க முடியுமா? ஏன் அப்படி நடக்க முடியாததை எழுதினார்கள்? அதில்தான் ஆழமான மகத்துவத்தை அமைத்து வைத்திருக்கிறார்கள்.

சிலர் வாலிப முறுக்காலும், பணச் செருக்காலும் தங்கள் இந்திரியங்களை, இயற்கையை மீறிச் செலவு செய்து காலிகம் பேசி ராவணனைப்போல் பல இன்னல்களால் நசுக்கப்படுகிறார்கள். அவர்கள் அதிலிருந்தும் மீளவேண்டுமானால், யோக ஆசனங்கள் பழகி முதுகெலும்பையும், நரம்புகளையும் சீர்படுத்திக் கொள்ள வேண்டுமென்பதே அதன் அர்த்தம்.

எத்தனை வாலிபர்கள் இப்படி இன்னல்களால் நசித்துப் போனார்கள்! பார்க்கப் பரிதாபமாய் இருக்கிறது; கேட்கக் கொடூரமாயிருக்கிறது. இளம் வயதில் இன்பம் அனுபவிக்க வேண்டியவர்கள், ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாமல் உதவாக் கரையாக வாழுகிறார்கள். அன்பாகும் அவமானமும் இவர்களைச் சீர்குலைக்கிறது. பலஹீனமும், நோய்களும் இவர்களிடம் தஞ்சம் அடைகின்றன. இவர்களுக் கெல்லாம் விமோசனம் இடையாதா? விமோசனம் உண்டு. ஹலாசனம் பழகி வந்தால் போதும்.

வீணையின் இனியநாதத்தை அனுபவிக்க வேண்டுமானால், அதன் மெட்டுகளைச் சுத்தமாய்த் துடைத்து, கம்பிகளைச் சுருதிக்குத் தக்கபடி அமைத்து மீட்டி வாசிக்க வேண்டும். நம் வாழ்க்கையை ஆரோக்கியமாகக் கழிக்க வேண்டுமானால் மேரு தண்டத்தின் எலும்புகளை எந்தப் பக்கமும் வளையக் கூடியதாயும், நரம்புகளை இழுத்து, வளர்த்து முறுக்கேற்றிச் சுறுசுறுப்பாய் வைத்துக் கொள்ள வேண்டும். வீணையில் தந்திகள் அறுபட்டால் வேறு மாற்றிப் போட்டு விடலாம். மானிட தேகத்தின் தந்தி, அதாவது நரம்புகள் எந்தக் கடையில் கிடைக்கப் போகின்றன? பாரதியார் சொன்னது போல் சரீரத்தின் நலன் கெட, அதை புழுதியில் எறிய வேண்டியது தான். நரம்புக் கோளாறுகளினால் எத்தனை எத்தனையோ இளைஞர்கள் கிலேசமையெனத் தங்கள் அருமையான வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள்!

மூளையிலிருந்து நரம்புக் கூட்டங்கள் கழுத்தின் பின்புறமிருக்கும் முதுகுத் தண்டின் மோதிரம் போன்றுள்ள துவாரங்களின் வழியாய் வருகின்றன. அந்தப் பாகங்களுக்குச் சம்பந்தமான நரம்புகள், முதுகுத்தண்டின் வளையங்களின் பக்கச் சந்துகளின் வழியாக, அந்தந்த இடங்களில் பிரிகின்றன. அந்த நரம்புகளிலிருந்து பல பிரிவுகள் மரக் கிளைகளைப் போலப் பிரிந்து சரீரம் முழுவதும் பரவுகின்றன. இந்த நரம்புக் கூட்டங்களினால்

லாம் சரியாக இருக்க வேண்டுமானால் முதுகுத் தண்டின் வழியாகச் செல்லும் பெரிய நரம்புக் கூட்டங்கள் நல்ல நிலையில் இருக்கவேண்டும்.

ஒரு மரத்தின் இலைகள் காய்ந்து விடுகிறது என்று வைத்துக் கொள்வோம். அது இலையின் கோளாறா? எந்தக் காரணத்தினாலோ, மரத்தின் அடித்தண்டிலிருந்து அதற்குப் போதுமான சத்து கிடைக்காமலிருக்கலாம். சத்தை கிரகித்துக் கொள்ள இலைகளுக்குச் சக்தியில்லாமல் இருக்கலாம். ஆகவே மரத்தின் மத்தியில் இருக்கும் நரம்புகளைப் போன்ற வழிகள் சீர்கெடுவதால் இம்மாதிரி ஏற்படுகிறது என்று தெரிகிறது.

அம்மாதிரியே மனிதனின் நரம்புகளும் கெடுவதுண்டு. உணர்ச்சியற்றுப் போவதுண்டு. அவயவங்கள் கூம்பிப் போவதுண்டு. இத்தனைக்கும் காரணம் தலைமை ஸ்தானமாகிய முதுகெலும்பின் நரம்புகள் மரத்துப் போய்க் கெடுவதால்தான்.

அதனை மறுபடியும் சுறு சுறுப்பாக, சீர்படச் செய்வது ஹலாசனமே. ஹலாசனத்தில் முதுகெலும்புகள் எல்லாம் படிப்படியாய் வளைவதுடன் நரம்புகளை இழுத்து, வளைத்து சுறுசுறுப் பெற்றுகிறது. இந்த வேலைகளை எந்த மருந்தினாலும் செய்ய முடியாது. அப்படிச் செய்வதாயிருந்தாலும் அது கண்கட்டி வித்தை போல் சில நாளைக்குச் சுறுசுறுப்பாக இருக்கலாம். அந்த மருந்து அருந்துவதை நிறுத்தி விட்டாலோ, முன்னைவிட நரம்பு பலவீனம் அடைந்து விடும். நாம் சாப்பிட்ட மருந்துகளினால் பலவிதக் கோளாறுகள் உண்டாகும்.

நரம்பு பலவீனம் ஒரு பெரிய விரோதி. எந்த நேரமும் உடல் தளர்ச்சி என்றால், பிறகு உள்ளம் உறுதி எப்படி ஏற்படும்? எத்தனை பேர் சிடுசிடுத்தும், அடிக்கடி கோபம் கொண்டும், தன்னிடம் இருக்கும் குறைகளை அறியாமல் பிறரை எடுத்ததற் கெல்லாம் குறை கூறிக் கொண்டும் இருக்கிறார்கள்! காரணம் அவர்களின் நரம்புக்கோளாறே.

சிலருக்குக் கைகள் எந்த நேரமும் நடுங்கும். விரல்களும் நடுங்கும். சிலருக்கு மிக விகாரமாய்த் தன் கட்டுப்பாட்டுக்குள் அடங்காமல் வலிப்பு வந்தது போல் உடம்பு ஆடும். பார்க்கப் பரிதாபமாய் இருக்கும். இவர்கள் சாப்பிடாத மருந்து கிடையாது. பார்க்காத டாக்டர் கிடையாது. ஆனால் குறை என்னமோ நீங்கினபாடில்லை.

சிலர் இப் பாகங்களை என்னென்னமோ மருந்துகளைக் கொண்டு தேய்ப்பார்கள். மாலிஷ் செய்வார்கள். தேய்த்துச் சூடேற்றினவரை அந்த இடத்தில் இரத்தம் பாய்ந்து சற்றுச் சுமாராய் இருப்பது போல் இருக்கும். பிறகு ரத்தம் பாய்வதற்கும் உணர்ச்சி ஊட்டுவதற்கும் நரம்புகளினால் முடியாது. எதையும் இயற்கையாகத் தன் இச்சையாகச் செய்யும்படி விட்டால்தான் நீடித்து நிற்கும். முரண்டு செய்யும் குதிரையைச் சாட்டையால் அடித்து ஓட்டுவதைப் போலத்தான் மருந்து தேய்ப்பது எல்லாம். சாட்டையால் அடிக்க வில்லையானால் குதிரை ஓடாது. மருந்து உபயோகிக்க வில்லையானால் நரம்பிற்கு உணர்ச்சி இருக்காது. இதுவா வாழ்க்கை? மருந்தை நம்பி வாழ்வது ஒரு வாழ்க்கையாகுமா? இயற்கைச் சக்திகளை மறந்து செயற்கைப் பொருள்களுக்கு அடிமையாகி விடுகிறோம்.

பணக்காரர்களால் மருந்துகளை வாங்க முடியும். ஆனால் ஏழைகள் எங்கு போவார்கள்? தற்போது 50, 60 ரூபாய் சம்பளமுள்ள ஒரு சாதாரண குமாஸ்தாவும் தன் வருமானத்தில் கால் பங்கை மருந்துக்காகச் செலவு செய்ய வேண்டியிருக்கிறதே! வரும் வருமானம் வயிற்றிற்கே போதாதபோது, மருந்துக்கு வேறு அநியாயமாய்ச் செலவு செய்கிறார்கள். முன்பெல்லாம் இத்தனை வியாதிகள், இத்தனை கோளாறுகள் இருந்தனவா? ஆகாரச் சீர்கேடு, இல்லறத்தில் அளவிற்கு மிஞ்சிய ஈடுபாடு, அதைத் தாண்டக்கூடிய சாதனைகள் நிரம்பி விட்டிருக்கின்றன. மனிதனைத் தூய்மைப்படுத்த, விவேகமுள்ளவனாக்க, மனிதனை மனிதனாக்க வேண்டிய சாதனங்கள் தற்பொழுது மிகவும் குறைந்து வருகின்றன.

ஆகையால் அன்பர்களே! நாம் வாழப் பிறந்தோம், இதற்கு இடைஞ்சல் செய்யக் கூடிய எதிலும் மனம் செலுத்தாமல், நற்செயல்களை ஆற்றிவருவோமாக. (தொடரும்)

# அது தவறா?

வசா

காலையில் பத்து மணிக்குச் சாப்பிட்டு விட்டு ஆபீசுக்குப் போனால், அப்பா வழக்கமாக சாயந்திரம் ஐந்தரை மணிக்குத்தான் வீடு திரும்புவார். பிற்பகல் சிற்றுண்டியைப் போகும்போதே கையில் எடுத்துக் கொண்டு போய் விடுவார். அப்படியிருந்தும் அன்று அவர் மத்தியானம் இரண்டு மணிக்குத் திரும்பி விட்டார். வந்ததும் அம்மாவிடம் "இன்றைக்குச் சாயந்திர ரயிலில் சங்கரன் வருகிறானாம், ஆபீஸ் விலாசத்திற்குக் கடிதம் வந்தது. இந்தத் தகவலை பவானியிடம் சொல்லி விடு" என்று சொல்லிக் கொண்டிருந்தார். அப்பாவின் பேச்சில் என்னுடைய பெயரும் அடிபடுவதைக் கேட்டுப் பின்கட்டிலிருந்து அங்கே வந்தேன்.

"ஆமாம், கடிதத்தில் இன்னும் வேறு என்ன எழுதியிருக்கிறான்!" என்றாள் அம்மா.

"அதைச் சொல்லத்தான் நான் வந்தேன். பவானியைக் கையோடு அழைத்துக் கொண்டு போகப் போகிறானாம்" என்றார் அப்பா.

"நான்தான் படிக்கப் படிக்கச் சொல்லுகிறேனே! நம்ம குழந்தையை மறுபடியும் அந்தக் குக்கிராமத்திற்கு அனுப்ப முடியாது. அவள் போய் அங்கே நாலு மாதம் கஷ்டப்பட்டது போதாதா! உங்கள் மாப்பிள்ளை சங்கரன் எப்போது அந்தப் பட்டிக் காட்டைவிட்டு வெளியேறிப் பட்டண வாசத்திற்கு வந்து, ஒரு உத்தியோகத்தில் அமருகிறானோ அப்போது பவானியை அவன்கூட அனுப்பி வைத்தால் போதும்" என்று என் மனதிலிருப்பதை அப்படியே பிரதிபலிப்பது போல் தீர்மானமாக எடுத்துச் சொன்னாள் அம்மா.

அப்பாவுக்குக் கோபம் தாங்கவில்லை. "இதையெல்லாம் பவானியை அவனுக்குக் கலியாணம் செய்து கொடுப்பதற்கு முன்பே யோசித்திருக்க வேண்டும். இப்போது நினைப்பதில் பிரயோஜனமில்லை. பவானி அவனுக்குச் சொந்தமான பிறகு நாம் அவளை அவனுடன் அனுப்ப முடியாது என்று சொல்லுவதற்கு அதிகாரம் கிடையாது. பவானி அவளுக்கு வேண்டிய சாமான்களை எடுத்து வைத்துக் கொண்டு தயாராக இருக்கட்டும். சங்கரன் வந்த பிறகு அவன்கூடப் புறப்பட முடியாதென்று சாக்குப் போக்குச் சொன்னால் நடக்காது. நான் சாயங்காலம் ஆபீஸ் விட்டதும் ரயிலுக்குப் போய்ச் சங்கரனை அழைத்துக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டு மறுபடியும் ஆபீசுக்குப் போய்விட்டார்.

அவர் திரும்பிப் போனதும் அம்மா என்னிடம் வந்து "பவானி, என்ன சொல்லுகிறாய்!" என்று கேட்டாள்.

"எனக்கு அந்தக் கிராமத்திற்குப் போவதற்குக் கொஞ்சம்கூட இஷ்டமில்லை. ஆனால் அவர் நேரில் வந்து கூப்பிடும் போது என்ன பதில் சொல்லுவது!" என்றேன் தயக்கத்துடன்.

"ஐயோ, பெண்ணே! சொல்லிக் கொடுத்த வார்த்தையும் கட்டிக் கொடுத்த சாதமும் எத்தனை நாளைக்கு உபயோகப்படும்! நீ எப்படித்தான் குடியும் குடித்தனமுமாகப் போய் வாழப் போகிறாயோ! பம்பாயிலே உன் மைத்துனன் குடித்தனம் வைத்து உத்தியோகம் பார்த்துக் கொண்டு இருக்கவில்லையா! அது மாதிரி உன் அகத்துக்காரரும் ஒரு உத்தியோகம் செய்து கொண்டு பட்டண வாசத்தில் குடியிருக்கக் கூடாதா, என்ன! இந்த மாதிரி அவனைக் கேள் என்று கூடவா நான் உனக்குச் சொல்லித்தர வேணும்" என்று அங்கலாய்த்துக் கொண்டாள் அம்மா.

"சரி, அம்மா! நீ சொன்னபடியே செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு என் கணவர் வந்ததும் அவரிடம் எந்தவிதமாகப் பேசி அவரை என் வழிக்குக் கொண்டு வருவது என்று யோசிப்பதில் ஈடுபட்டிருந்தேன்.

சுவரிலுள்ள கடிகாரத்தில் மணி ஆறு அடித்ததும் வாசலில் மிதியடிச் சத்தம் கேட்டது. அப்பாதான் ஆபீசிலிருந்து திரும்பி வந்தார். அம்மா அவரை எதிர்கொண்டழைத்து "மாப்பிள்ளை வரவில்லையா!" என்றாள்.

"இந்த ரயிலில் வரவில்லை. ஒரு வேளை வராததற்குக் காரணத்தைத் தெரிவித்து நாளைக்குக் கடிதம் வரலாம்" என்றார் அப்பா.

அப்பா எதிர் பார்த்ததுபோல், அடுத்த நாள் தபாலில் கடிதம் ஒன்றும் வரவில்லை. வழக்கம் போல் சாப்பிட்டு விட்டு அப்பா ஆபீசுக்குப் புறப்பட்டுப் போனார். வாசற் கதவை மூடி விட்டு நானும் அம்மாவும் சாப்பிடுவதற்கு உட்கார்ந்தோம். வாசல் கதவை யாரோ தட்டுவதுபோ லிருந்தது. இலையிலிருந்து எழுந்து போய்க் கதவைத் திறந்தேன். வாசலில் என் புருஷர் நின்று கொண்டிருந்தார். அவரை உள்ளே வரவேற்றுக் கூடத்திலிருந்த ஊஞ்சலில் உட்கார வைத்துக் குசலப் பிரச்னம் விசாரித்தேன். இதற்குள் அம்மா அவசரம் அவசரமாக விருந்து தயாரிப்பதில் ஈடுபட்டாள். விருந்து தயாரானதும் அவருக்கு விருந்தளித்து விட்டு நானும் அம்மாவும் சாப்பாட்டை முடித்துக் கொண்டோம்.

முன் கட்டிலிருந்த நாற்காலி யொன்றில் உட்கார்ந்த வண்ணம் அவர் அன்றைய பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தார். நான் போட்டிருந்த திட்டத்தை நிறைவேற்றுவதற்காக அவரை அணுகினேன். என்னைப் பார்த்ததும் "ஆமாம், பவானி! ஊரிலிருந்து உன் தாயாருடன் இங்கே வரும்போது 'பத்தே நாளில் திரும்பி விடுகிறேன்' என்று சொல்லி விட்டு வந்தாயே! கிட்டத் தட்ட ஒரு மாதத்திற்கு மேலாகப் போகிறது. உனக்கென்ன, என் ஞாபகம்கூட இல்லையா! பெயருக்கு ஒரு கடிதம் கூடப் போடவில்லை. அதுபோகட்டும், அடுத்த வாரம் நம்முடைய ஊர்க் கோவிலில் உற்சவம் ஆரம்பிக்கிறது. அதற்காக அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்து ஜனங்கள் வருவது வழக்கம். அவர்களை வரவேற்று உபசரிக்க நீ என்னுடன் கட்டாயம் இருக்க வேண்டும். நீ உடனேயே என்னுடன் புறப்பட்டு விடு. இதற்காகத்தான் முன்

கூட்டியே உன் தகப்பனாருக்குக் கடிதம் எழுதியிருந்தேன். சாயந்திரம் உன் அப்பா வந்ததும் அவரிடம் சொல்லிக் கொண்டு ராத்திரி ரயிலிலேயே புறப்பட்டு விடலாம்'' என்றார் என் முகத்தைப் பார்த்துக் கொண்டே.

ஒரு நிமிஷம் மௌனமாக இருந்தேன். ''என்ன யோசனை!'' என்றார்.

''ஒன்றுமில்லை. உங்கள் கிராமம் எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை'' என்றேன்.

''ஏன்?''

''பொழுது போவதே கஷ்டமாயிருக்கிறது. ஒரு சினிமா கிடையாது, ஒரு டிராமா கிடையாது. சொல்லப் போனால் பேச்சுத் துணைக்குக்கூட நாலு படித்த பெண்கள் கிடையாது. இன்னும்......''

''உனக்காக என் கிராமத்தை மாற்ற முடியுமா! ஏதோ இருக்கிற சௌகரியத்தை வைத்துக் கொண்டு காலட்சேபம் நடத்த வேண்டியதுதான்.''

''அவ்வளவு கஷ்டம் எதற்கு! சௌகரியம் இருக்கிற இடமாகப் பார்த்து நாம் கிராமத்திலிருந்து மாற்றிக் கொண்டால் போகிறது.''

''நடக்கக் கூடிய காரியமாகத் தோன்றவில்லையே!'' என்றார்.

''ஏன்! உங்கள் அண்ணா பம்பாயில் உத்தியோகம் பண்ணிக் கொண்டு குடியும் குடித்தனமுமாக இருக்கிறாரே, உங்களை விடப் படிப்பில் குறைந்தவர்தான். நீங்கள் மனசு வைத்துப் பிரயத்தனப்பட்டால் உங்களுக்குப் பம்பாயிலோ, சென்னையிலோ அவரை விடப் பெரிய உத்தியோகம் கிடைத்து விடலாம். அதனால் நம் இருவருக்கும் நல்லதுதானே!'' என்றேன்.



''நம் இருவருக்கும் என்னவோ நல்லதுதான். ஆனால் சிறு வயதிலேயே தாயாரை இழந்த என்னை எடுத்து வளர்த்து மனிதனாக்கிய என்னுடைய அத்தையை அவளுடைய தள்ளாத வயதில் நான் உத்தியோகம் பார்க்கும் இடத்துக்கு அழைத்துக்கொண்டு போய்ச் சிரமப்படுத்துவது அழகல்ல. என்ன இருந்தாலும் பட்டண வாசத்தில் அத்தைக்கு அநேக அசௌகரியங்கள் ஏற்பட்டு விடும். தவிரவும் ஊரிலிருக்கும் நிலங்களைச் சரியாகச் சாகுபடி செய்தாலே குடும்பச் செலவுக்கு வேண்டிய வரும்படி கிடைக்கிறது. எதற்காக உத்தியோகத்தைத் தேடி அலைய வேண்டும் நான்!'' என்றார்.

''உங்களுக்கு அத்தையின் நலனில் இருக்கிற அக்கறையைப் போல் உங்கள் அண்ணாவுக்கு ஏன் இல்லையோ! ஒருவேளை நீங்கள் ஏமாந்தவர் என்று உங்கள் அண்ணா நினைத்துவிட்டாரோ!'' என்று கேட்டேன் நான்.

''பவானி, இந்த விஷயத்தில் நீ எதற்காக அண்ணாவைக் குறிப்பிட்டுப் பேசுகிறாய்! அது தவறு! அவனுக்கு இருக்கும் கஷ்ட நஷ்டங்கள் எனக்குத் தெரியும்.''

''அப்படியானால் உங்களுக்கு உங்கள் அண்ணாவின் சௌகரியம், உங்கள் அத்தையின் விருப்பம் இவைதான் பிரதானம். என் சௌகரியம் உங்களுக்கு ஒரு பொருட்டாகப் படவில்லை. இல்லையா!'' என்றேன்.

''நான் கிராமத்திலேயே இருந்து கொண்டு படிப்பு முடிந்ததும் விவசாயத்திலேயே ஈடுபட்டிருக்கிறேன் என்று தெரிந்துகொண்டு எப்பொழுது நீ என்னைக் கலியாணம் செய்து கொள்ளச் சம்மதித்தாயோ, அப்பொழுதே நீ இந்த வாழ்க்கைக்கு உன்னைத் தயார் செய்து கொண்டிருக்க வேண்டும். ஆகவே, இப்பொழுதிருக்கிற சௌகரியத்தை விட அதிகமான சௌகரியத்தை நீ எதிர்பார்க்க முடியாது. இதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு பேசு'' என்றார் கோபமாக.

''உங்களைக் கலியாணம் செய்து கொண்ட பாவத்திற்காக நான் என் சௌகரியங்களைப் பலியிட்டு, அந்தப் பட்டிக்காட்டில் வந்து மக்கி மடிய வேண்டும். இதுதானே உங்கள் எண்ணம்!'' என்றேன்.

''பவானி, என்ன சொன்னாய்! என்னைக் கலியாணம் செய்து கொண்டது பாவமா! சரி, நீ படித்த பெண். உன் இஷ்டம் போல் நான் மாறும் வரை நீ உன் பிறந்தகத்திலேயே இரு. நான் வருகிறேன்'' என்று சொல்லி விட்டுக் கோபத்துடன் வெளியே கிளம்பி விட்டார்.

அவரைத் தடுத்து நிறுத்தி விடலாம் என்று எண்ணிக் கொண்டு வாசல் வரை ஓடினேன். அதற்குள் அவர் வாசலில் போய்க் கொண்டிருந்த பஸ்ஸில் ஏறி விட்டார். நிர்ப்பிரமை அடைந்து உள்ளே திரும்பினேன். என்னையுமறியாமல் கண்களில் நீர் கசிந்தது. அம்மா என்னைக் கண்டவுடன் ''சரி சரி, இதற்காக ஏன் அழுகிறாய்! சங்கரனிடம் உன் மனதிலிருப்பதை எடுத்துச் சொல்லி விட்டாய் அல்லவா! இப்போது அவன் கோபமாகப் போனாலும் கிராமத்தை அடைந்து ஆற அமர யோசித்துப் பார்க்கும் போது, நீ சொன்னதுதான் சரி என்று தெரிந்து கொள்ளுவான். நீ வேண்டு



மாளும் பாரேன். இன்னும் ஒரு வாரத்தில் அவனிடமிருந்து கடிதம் வரும்'' என்றாள். அம்மாவின் வார்த்தைகள் அப்போதைக்கு எனக்குக் கொஞ்சம் ஆறுதலாயிருந்தது.

**சா**யந்திரம் அப்பா ஆபிஸிலிருந்து திரும்பி வந்ததும் அம்மா அவரிடம் அன்று மாப்பிள்ளை வந்து போன விவரத்தையும் மற்றும் நடந்த சமாசாரத்தையும் சொன்னாள். அப்பாவுக்குக் கோபம் வந்துவிட்டது. அம்மாவைப் பார்த்து, ''நீ பவானிக்கு நல்ல புத்தி சொல்லி, அவளை மாப்பிள்ளையுடன் அனுப்பி வைப்பதை விட்டு விட்டு, நீயும் பவானியின் பிடிவாதத்திற்கு உடந்தையாயிருந்தாயல்லவா! இதெல்லாம் ஏதோ விபரீதத்திற்குத்தான்'' என்று இரைந்தார். அடுத்தாற்போல் என்னைப் பார்த்து ''பவானி, நடந்தது நடந்துவிட்டது. இப்போதும் ஒன்றும் கெட்டுப் போய்விடவில்லை. நீ புறப்படு. நானே உன்னை ராத்திரி ரயிலில் கொண்டு போய் விட்டுவிட்டு வருகிறேன். நீ உன் சாமான்களை எடுத்துத் தயாராக வைத்துக்கொள். நான் வெளியே போய் விட்டு வருகிறேன்'' என்று வெளியே சென்றார்.

என்னுடைய துணிமணிகளையும் மற்றுமுள்ள சாமான்களையும் சேகரிப்பதில் ஈடுபட்டேன். அம்மா என்னைப் பார்த்து, ''பவானி, அவசரப்பட்டுக்கொண்டு போகப் போகிறாயா! நீ புறப்படுவதைப்பற்றிக் கொஞ்சம்கூட எனக்கு ஆட்சேபணை இல்லை. நீ அங்கே போய்ச் சேர்ந்த பத்து நாளைக்கெல்லாம் 'எனக்கு இங்கே இருப்புக் கொள்ளவில்லை. என்னை வந்து கூட்டிக்கொண்டு போய் விடு' என்று கடிதம் எழுதினால் நான் எட்டிக் கூடப் பார்க்க மாட்டேன்'' என்றாள் தீர்மானமாக.

என் நிலைமை தர்ம சங்கடமாகப் போய் விட்டது. அப்பா வெளியே இருந்து திரும்பி வந்ததும் நான் அப்பாவிடம் ''எதற்கும் கொஞ்ச நாள் கழித்துப் போகிறேன்'' என்றேன் தயக்கத்துடன். அவர் அலுப்புடன் ''சரி, நீ உன் அம்மாவின் புத்திமதியைக் கேட்க ஆரம்பித்து விட்டாயல்லவா! இது எதில் போய் முடியுமோ!'' என்று சொல்லி விட்டு மௌனமாகி விட்டார்.

## 2

**அ**ன்றிரவு முழுவதும் என் மனசு ஒரு நிலையில் இல்லாமல் தத்தளித்தது. அன்று நான் செய்த காரியம் சரிதானா என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். எதற்கும் என் புருஷன் கூடவே போயிருந்தால் நலமாயிருக்கும் என்று நினைப்பேன் ஒரு கணம். அடுத்த கணம் ஒருவேளை அம்மா சொன்னபடி அவர் கிராமத்துக்குப் போனதும் மனம் மாறிக் கிராமத்திலிருந்து வெளியேறி நகரத்திற்கு வந்து உத்தியோகத்தில் அமர்ந்தாலும் அமரலாம் என்று நினைப்பேன். அவரை அப்படிச்செய்யத் தூண்டுவதற்கு ஏதுவாக இருக்கும் பொருட்டு நான் அன்று அவருடன் போக மறுத்தது சரியான முடிவுதான் என்று என் மனதைச் சமாதானப்படுத்திக் கொள்ளுவேன். காலப் போக்கில்தான் என் செயலின் பலாபலன்களைக் காணமுடியும் என்ற தீர்மானத்துக்கு வந்து நிம்மதியடைந்தேன்.

விளையாட்டுப்போல் மூன்று மாதம் கழிந்து விட்டது. ஒவ்வொரு நாளும் என் புருஷனிடமிருந்து கடிதம் வரும் என்று எதிர்பார்த்து நான் ஏமாற்றமடைவது சகஜமாகி விட்டது. அவருக்கு நானாகக் கடிதம் எழுதுவதற்குத் தடையாக என்னுடைய வறட்டு ஜம்பம் குறுக்கே நின்றது. நாளடைவில் அவர் திடசித்தமுள்ளவர் என்ற உண்மை எனக்குத் தெளிவாகிக் கொண்டு வந்தது. ஒவ்வொரு சமயம் அம்மாவிடம் ''அம்மா, நான் புக்ககத்திற்குப் போய் வருகிறேன். இனிமேல் காத்திருப்பதில் பலனில்லை, என் தலை யெழுத்துப் போல் நடக்கட்டும்'' என்பேன். அதற்கு அம்மா பதில் சொல்லும் விதம் என்னுடைய தன்மானத்தையே தாக்குவது போலிருக்கும்! ''இவ்வளவு கோழை மனதை வைத்துக் கொண்டு நீ எப்படித்தான் குறை காணும் புக்ககத்தில் குப்பை கொட்டப் போகிறாயோ! இப்படிப்பட்டவள் அன்றைக்கே, சங்கரன் வருந்தி அழைத்த போதே போயிருந்தால் எவ்வளவோ மானமாயிருந்திருக்குமே'' என்பாள். இந்த விஷயத்தில் அம்மாவின் கைப் பாவையாக என்னையே நான் ஆக்கிக் கொண்டு விட்ட பிறகு, அம்மாவின் வார்த்தையைத் தட்டிப் பேச எனக்குத் தைரியமேது!

சில சமயம் மணிக்கணக்காகப் பித்துப் பிடித்தவள் போல் உட்கார்ந்து கொண்டு யோசிப்பேன். இப்படி ஒரு நாள் உட்கார்ந்திருந்த போதுதான் எங்கள் ஊர்க் கல்யாணத் தரகர் கனக சபேசய்யரின் மனைவி காமாட்சி அம்மாள் எங்கள் வீடு தேடி வந்தாள். அப்பா சாப்பிட்டு விட்டு ஆபீசுக்குப் போயிருந்தார். அம்மா அடுத்த தெருவில் நடந்து கொண்டிருந்த கல்யாணத்திற்குப் போய்த் தாம்பூலம் வாங்கிக் கொண்டு வருவதாகச் சொல்லி விட்டுச் சென்றிருந்தாள். காமாட்சி அம்மாள் வந்ததும் ''பவானி, உன் அம்மா, எங்கே!'' என்று கனிவோடு கேட்டாள்.

"வெளியே போயிருக்கிறாள்" என்றேன்.

"சரி" என்று இழுத்தாற் போல் பதில் சொன்னாள் காமாட்சி அம்மாள்.

"ஏன், மாமி! ஏதாவது விசேஷம் உண்டோ?" என்று கேட்டேன்.

"ஆமாம், இல்லாமலா இந்தப் படை பதைக்கிற வெய்யிலில் இங்கே வருவேன்! எல்லாம் உன்னைப் பற்றித்தான்" என்றாள் பெருமூச்செறிந்து கொண்டு.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. "அம்மாவை வேணுமானால் போய்க் கையோடு அழைத்துக் கொண்டு வரட்டுமா?" என்றேன்.

"அம்மா எதற்கு உன்னிடமே சொன்னால் பாதகமில்லை. விஷயத்தை மட்டும் மனதில் வைத்துக் கொண்டு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொள். என் புருஷருக்கு உன் அகத்துக்காரர் அவருடைய ஜாதகத்தையும் இன்னும் இரண்டொரு பெண்கள் ஜாதகத்தையும் அனுப்பிப் பொருத்தம் பார்க்கச் சொல்லியிருக்கிறார் போலிருக்கிறது. இதைப் பற்றி என் அகத்துக்காரர் ஜோஸ்யரிடம் பிரஸ்தாபித்துக் கொண்டிருந்தார். எனக்குப் பகீர் என்றது. மனது கேட்கவில்லை. உடனே உன்னிடம் சொல்லுவதற்காக ஓடி வந்தேன். ஏன், உனக்கும் உன் அகத்துக்காரருக்கும் ஏதாவது மனஸ்தாபமா? நீ ஏதோ சாதாரணமாகப் பிறந்தகத்திற்கு வந்திருக்கிறாய் என்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன். என்னமோ போ! விதி யாரை விட்டது!" என்று அங்கலாய்த்தாள் காமாட்சி அம்மாள்.

காமாட்சி அம்மாள் சொன்ன தகவல் என் நெஞ்சை ஒரு தரம் உலுக்கியது. என் உள்ளத்தில் எழுந்த கொந்தளிப்பை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் காமாட்சியம்மாளுக்கு விடை கொடுத்தனுப்பி விட்டு, வெறி பிடித்தவள்போல் அம்மாவை அழைத்துக் கொண்டு வருவதற்காக வெளியே கிளம்பினேன். வாசலுக்கு வந்ததும் அப்பா 'பவானி' என்றழைத்துக்கொண்டே உள்ளே நுழைந்தார். "பவானி, அன்றைக்கே சொன்னேனே உன் அம்மா கேட்டாளா! உன் புருஷன் என்ன வெல்லாமோ செய்ய யோசனை பண்ணிக் கொண்டிருக்கிறானாம். இந்த விஷயம் என் ஆபீஸிலுள்ளவர்களுக்கு எட்டி, அவர்கள் என்னிடம் 'என்ன ஸார், உங்கள் பெண்ணை உங்கள் மாப்பிள்ளை தள்ளி வைத்து விட்டானாமே!' என்று இன்று கேட்க ஆரம்பித்து விட்டார்கள். இனிமேலும் தாமதித்தால் ஆபத்துத்தான். சட்டென்று கிளம்பு. மூன்று மணி ரயிலுக்கே உன்னை உன் புக்ககத்தில் கொண்டு போய்ச் சேர்த்து விடுகிறேன்" என்றார்.

"இப்போதான் காமாட்சி அம்மாள் என்னிடம் வந்து சொல்லி விட்டுப் போனாள். அம்மா அடுத்த தெருவுக்குப் போயிருக்கிறாள். அவளைக் கூட்டிக் கொண்டு வருகிறேன்" என்று தட்டுத் தடுமாறியபடி சொல்லி விட்டுக் கிளம்பினேன்.

அதற்கு அப்பா "நான் போய்க் கூட்டிக் கொண்டு வருகிறேன். நீ அதற்குள் உன் சாமான்களை எடுத்துத் தயாராய் வைத்துக் கொள்" என்று சொல்லி விட்டு வெளியே கிளம்பினார். அவசரம் அவசரமாக என் சாமான்களை எடுத்து வைத்துக் கொண்டேன். சற்று நேரத்துக்கெல்லாம் அப்பா அம்மாவுடன் வீட்டுக்குள் நுழைந்தார். அம்மாவின் முகத்திலும் கவலையின் ரேகை படர்ந்திருந்தது.

அன்று மூன்று மணி ரயிலில் அப்பாவும் நானும் என் புக்ககத்து ஊரை நோக்கிப் பிரயாணமானோம். புறப்படும்போது அம்மா எனக்கு வேண்டிய புத்திமதி சொல்லி அனுப்பி வைத்தாள். வழி நெடுக, நானும் அப்பாவும் என் கணவரின் வீட்டை அடைந்ததும், என் கணவர் கோபமடைந்து என்னையும் அப்பாவையும் மரியாதைக் குறைவாகப் பேசித் திருப்பி விடுவாரோ என்ற பயம் என் நெஞ்சை அழுத்திக் கொண்டிருந்தது.

சூர்யாஸ்தமனம் ஆனதும் நானும் அப்பாவும் புக்ககத்தை அடைந்தோம். அப்பொழுதுதான் என் கணவர் வயல் காடுகளுக்குப் போய் விட்




தலைப்பாகைக்காரர்:—என்னிடம் ஐந்து ரூபாய் கடன் வாங்கிக் கொண்டாலும் வாங்கிக் கொண்டீர், அப்புறம் என் கண்ணிலேயே படாமல் மறைந்து கொண்டே போகிறீரே? என்னைப் பார்த்தால் பணத்தைத் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று பயந்து விட்டீரோ?

குல்லாய்க்காரர்:—அப்படி ஒன்றும் இல்லை, ஐயா! உங்களைப் பார்த்தால் இன்னும் ஐந்து ரூபாய் கடன் கேட்கும்படியாக இருக்குமே என்று நினைத்துத்தான் உங்களைப் பார்க்காமல் போகிறேன்!

# சரிதான்!



"தம்பி! போர்டைப் பார்த்தாயா? ஜாக்கிரதையாக வா!"

டுப் பண்ணையாட்களுடன் பேசிக் கொண்டே வீடு திரும்பினார். அவர் எங்கள் இருவரையும் சுமுகமாக வரவேற்று உள்ளே அழைத்துக் கொண்டு போனார். கூடத்திற்கு வந்ததும் அப்பா என் கணவரிடம் கடந்த சில மாதங்களில் நடந்த சம்பவங்களை மறந்து விடுமாறு கேட்டுக் கொண்டார். அடுத்த நாள் காலை என் தகப்பனார் எங்களிடம் விடை பெற்றுக் கொண்டு போனபின், ஒரு வேளை என் கணவர் என்னிடம் கடுமையாக நடந்து கொள்ளுவாரோ என்று பயந்து கொண்டிருந்தேன். ஆனால் எப்போதும் போலவே என்னுடன் அவர் இயற்கையான சரள சுபாவத்துடன் பழகியது எனக்கு ஆச்சரியமாயிருந்தது.

## 3

**நா**ன் கிராமத்திற்கு வந்து இரண்டு நாள் ஆகியிருக்கும். சாயங்காலம் பொழுது போய்க் கரு கரு என்று இருட்டிக் கொண்டிருந்தது. ஊருக்குப் பக்கத்திலிருந்த வாய்க்காலிலிருந்து ஜலத்தை எடுத்துக் கொண்டு பின் வாசல் வழியாக வீட்டுக்குள் நுழைந்தேன். கூடத்தில் ஒரே இருட்டாக இருந்தது. விளக்கை ஏற்றுவதற்காக மூன் கட்டிலிருந்த அலமாரியிலிருந்து தீப்பெட்டியை எடுத்துக் கொண்டு வருவதற்காக அங்கே போனேன். அப்போது வெளித் திண்ணையில் என் கணவரும் கலியாணத் தரகர் கனகசபேசய்யரும் பேசிக்கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. என்னைப் பற்றித்தான் அவர்கள் பேசிக்கொண்டிருப்பார்கள் என்று நான் நினைத்தது வீண் போகவில்லை.

கனகசபேசய்யர், "ஆமாம், நான் எடுத்துக் கொண்ட சிரமத்திற்கு நீங்கள் ஐம்பது ரூபாயாவது கொடுப்பீர்கள் என்று நினைத்தேன்" என்றார்.

"ஆமாம், நீங்கள் சாதாரணமாக ஒரு கலியாணத்தை முடித்து வைத்தாலே சன்மானமாக முப்பது ரூபாய்க்கு மேல் எதிர்பார்க்க மாட்டீர்களே! நீங்கள் பவானியை அவள் பிறந்தகத்திலிருந்து இங்கே புறப்பட்டு வரும்படி செய்ததற்கு இதைவிட அதிகம் எதிர் பார்க்கலாமா!" என்றார் என் கணவர்.

இதைக் கேட்டதும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. மேலே அவர்கள் என்ன பேசிக் கொள்ளப் போகிறார்கள் என்று கவனமாகக் கேட்க ஆரம்பித்தேன்.

"அடாடா, இதில் நான் மாத்திரம் உழைக்கவில்லை. என் சம்சாரத்தை விட்டு உங்கள் பவானியிடம் நேரில் போய் நீங்கள் இரண்டாந் தாரம் கலியாணம் செய்து கொள்ள முயற்சி செய்து கொண்டிருப்பதாகத் தகவல் சொல்லச் சொன்னேன். அவள் அங்கே போய் விட்டு வந்ததும், நான் போய் உங்கள் மாமனாரிடம் போய் இந்த தகவலைத் தெரிவித்தேன். இவ்வளவெல்லாம் செய்யாவிட்டால் காரியம் கைகூடுமா என்ன! ஏதோ நீங்கள் கொடுத்த வரையில் சந்தோஷம்" என்று சொல்லி விட்டு விடை பெற்றுக் கொண்டு வெளியே கிளம்பினார்.

அவரை அனுப்பிவிட்டு உள்ளே நுழைந்த என் கணவர் என்னை மூன் கட்டில் பார்த்ததும் பிரமித்துப் போய் "இருட்டில் என்ன செய்து கொண்டிருக்கிறாய்!" என்றார்.

"தீப்பெட்டி தேட வந்தேன். இதோ அகப்பட்டு விட்டது" என்று சொல்லி விட்டுத் தீப்பெட்டியை எடுத்துக் கொண்டு போய்க் கூடத்திலிருந்த விளக்கை ஏற்றி விட்டு வந்தேன். என் கணவர் என்னைப் புக்ககத்திற்கு வரவழைக்கச் செய்த சூழ்ச்சியை நினைத்ததும் எனக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. விளக்கை ஏற்றி வைத்ததும் வேகமாக என் கணவரிடம் வந்து, "பாவம், நீங்கள் என்னை இங்கே கூட்டிக் கொண்டு வருவதற்குள் ரொம்ப சிரமப்பட்டு விட்டீர்கள். போதாத குறைக்கு உங்களுக்கு முப்பது ரூபாய் வேறு செலவு" என்றேன்.

அதற்கு அவர் சிரித்துக்கொண்டே "பவானி, என்னைப் பற்றி நீ தெரிந்து கொண்டது அவ்வளவுதான். நான் கிராமத்திலேயே பிறந்து வளர்ந்தவன். பணத்தின் அருமை தெரிந்தவன். இந்த விஷயத்தில் எனக்குக் காலணாச் செலவு கிடையாது. இந்த யோசனையும் என்னுடையதல்ல" என்று சொல்லிவிட்டு விறு விறு என்று போய் அவருடைய பெட்டியிலிருந்து ஒரு கடிதத்தையும், அவர் பெயருக்கு வந்திருந்த முப்பது ரூபாய்க் குரிய மணியார்டர் கூபனையும் என்னிடம் கொண்டு வந்து கொடுத்தார். கடிதத்தைப் படித்து முடித்ததும் ஸ்தம்பித்துப் போய் விட்டேன்! கடிதம் எழுதி மணியார்டரும் அனுப்பியிருந்தவர் சாட்சாத் என்னுடைய தகப்பனார்!

இவ்வளவு கேவலமாக அப்பாவும் நடந்து கொண்டாரே என்று என் உள்ளம் குமுறியது. ஆனால் இதெல்லாம் ஒரே கணத்திற்குத்தான். கணவனைக் கைப்பிடித்த நாரிகைக்குப் பிறந்தகத்தை விடப் புக்ககமே உகந்த இடம் என்னும் உண்மையை எனக்கு மறக்க முடியாத விதத்தில் அறிவுறுத்திய அப்பாவை அடுத்த கணத்திலேயே என் அந்தராத்மா வாழ்த்தத் தொடங்கியது. ஆம், அப்பா செய்தது தவறல்ல. அவர் தம்முடைய கடமையைத்தான் செய்தார்.

# சினிமா விஜயம்

ஜி. வேதாந்தம்

சமையற் கட்டிலிருந்து 'கம்' மென்று கருவேப்பிலை வாசனையுடன் சாம்பார் மணம் வீடு முழுதும் கமழ்ந்து கொண்டிருந்தது.

“என்ன இன்றைக்கு ஒரு நாளுமில்லாத திருநாளாகச் சாம்பார் வாசனை மூக்கைத் துளைக்கிறதே!” என்று கேட்டவாறே ராஜு முன் பக்கத்து ஹாலில் காலை வைத்தான்.

“என்றைக்குத் தான் நம்ம வீட்டுச் சாப்பாடு நன்றாய் இருந்தது என்று ஒப்புக் கொண்டிருக்கிறீர்கள்! அது இருக்கட்டும்; ஏதோ இன்றைக்கு நல்ல சினிமாவாக வந்திருக்கிறதாம்; பக்கத்து வீட்டு மாமி முதல் ஆட்டத்திற்குப் போகப் போகிறாளாம்; என்னையும் கூப்பிட்டாள்” என்று சொல்லிக்கொண்டே சுந்தரி சமையற்கட்டிலிருந்து வெளியே வந்தாள்.

“ஆமாம், எனக்குக் கூட இன்றைக்கு மனசு என்னவோ சரியாகவே இல்லை—சினிமாவுக்காவது போயிட்டு வரலாம் என்று தான் சீக்கிரம் வந்தேன்” என்றான் ராஜு.

“அப்படியானால் நான் எதற்காகப் பக்கத்து வீட்டு மாமியுடன் போக வேண்டும்! உங்களுடனேயே வருகிறேனே! நாமும் முதல் ஆட்டத்திற்கே போவோமே, என்ன சரிதானே!” என்றாள் சுந்தரி மூச்சு விடாமல்.

“இன்றைக்கு நீ 'கம கம' வென்று சாம்பார் செய்திருக்கிறாய். நான் உள்ளே நுழைந்தது முதல் நாக்கில் ஜலம் ஊறிக் கொண்டிருக்கிறது. சாப்பிட்டுவிட்டு இரண்டாவது ஆட்டத்திற்குத் தான் போவோமே; இல்லையானால் என்ன தான் படம் நன்றாய் இருந்தாலும் மனம் இங்கேயே தானிருக்கும்” என்றான் ராஜு சாம்பாரை விட்டு வர மனம் இல்லாதவனாக.

“ராத்திரி கண் விழித்தால் உடம்பு எதற்காகும்? சாப்பாடு எங்கே ஓடிப்போய் விடுகிறது! வந்து சாப்பிட்டால் போகிறது. கிளம்புங்கள் சீக்கிரம், நாழியாகிறது; நானும் முகத்தை அலம்பிக் கொண்டு வந்து விடுகிறேன்” என்று சொல்லியவாறே சுந்தரி சோப்புப் பெட்டியுடன் ஓடினாள்.

படம் ஆரம்பித்துவிட்ட போதிலும் கொட்டகையில் கூட்டம் இலேசாக இருந்தது. சுந்தரியை ஒரு தனியான இடத்தில் நிறுத்திவிட்டு ராஜு டிக்கட் வாங்குமிடத்தை அடைந்தான். பணத்தை எடுப்பதற்குப் பாக்கெட்டில் கையை விட்ட ராஜுவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'மணிபர்ஸை'க் காணோம். அன்று முதல் தேதி யாகையால் வாங்கிய சம்பளம் நூறு ரூபாயையும் அதில் வைத்திருந்தான். வயிற்றைப் பகீரென்றது. ஒன்றும் தோன்றாதவனாய் மெல்லச் சுந்தரியிடம் வந்து விஷயத்தை மென்று விழுங்கினான்.

சுந்தரிக்கு அழுகையே வந்து விட்டது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு “கிளம்பும்போதே தெரியும் எனக்கு; நீங்கள்தான் அபசகுனம் மாதிரி, 'இரண்டாவது ஆட்டம், இரண்டாவது ஆட்டம்' என்று சொல்லிக் கொண்டிருந்தீர்களே! வாருங்கள்! போய்ச் சாப்பிட்டுவிட்டு நிம்மதியாய்த் தூங்கலாம். எனக்குச் சினிமா ஒன்றுதான் குறைச்சல்” என்று அலுத்துக் கொண்டாள்.

டிக்கட் வாங்கும் பொழுது தன் பக்கத்தில் நின்று கொண்டிருந்த இரண்டு ஆசாமிகளின் பேரில் ராஜுவுக்குச் சந்தேகம். ஆனால் அவர்களை எங்கே, எப்படிக் கண்டு பிடிப்பது! எதற்கும் பக்கத்துப் போலீஸ் ஸ்டேஷனில் போய் எழுதி வைத்து விட்டு வீட்டிற்குப் போவதென்று தீர்மானித்துக் கொண்டு இருவரும் போலீஸ் ஸ்டேஷனை அடைந்தார்கள். சப்—இன்ஸ்பெக்டர் லோகநாதன் தன் 'கிளாஸ் மேட்' என்று தெரிந்தவுடனேயே, மணிபர்ஸ் கிடைத்து விட்டது போலிருந்தது. அழாக் குறையாய், சுவாதீனத்துடன் விஷயங்களைச் சொன்னான். லோகநாதனும் பர்ஸின் நீளம், நிறம், அடங்கியிருந்தவை முதலியவைகளைப் பற்றிக் குறித்துக் கொண்டு, எப்படியாவது பர்ஸைக் கண்டுபிடித்துக் கொடுப்பதாக வாக்களித்துத் தம்பதிகளை வழியனுப்பினார்.

தம்பதிகள் வீடு நோக்கி நடக்க ஆரம்பித்தனர். “இன்றைக்கு மழைதான் வரப் போகிறது என்று நினைத்தேன். ஒரு நாளுமில்லாத திருநாளாய் நீங்களே என்னோடு சினிமாவுக்கு வருவது என்று தீர்மானித்தீர்களோ, இல்லையோ! இப்படி யாராவது சினிமாவுக்குப் புறப்பட்டு விட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் விட்டு வருவார்களோ! அவ்வளவு அதிர்ஷ்டம். கால் வலி கண்டு விட்டது. வீட்டிற்குப் போய்க் கதவைத் திறந்து அக்கடான்னு...” என்று சொல்லும்போதே சுந்தரியின் கைகள் தாமாகவே இடுப்பில் இருந்த வீட்டுச் சாவியைத் துளாவின.

“ஐயையோ, சாவியையும் காணோமே!” என்று சுந்தரியின் வாய் தானாகவே அலறி விட்டது. இந்த எதிர்பாராத தகவலைக் கேட்டு ராஜு அசந்து போனான். மணி பத்துக்கு மேல் ஆகி விட்டது. இந்த வேளையில் யார் வீட்டுக்குப் போவது, எங்கே படுப்பது, சாப்பிடுவது ஒன்றுமே புரியவில்லை. சட்டென்று தன்னிடம் ஒரு 'டூப்ளிகேட்' சாவி இருப்பது ஞாபகம் வரவே மனதைச் சற்றுத் திடப்படுத்திக் கொண்டான். ஆனால் அந்த திடம் அதிக நேரம் நீடிக்கவில்லை. 'டூப்ளிகேட்' சாவியைத் தான் பர்ஸில் வைத்துத் தொலைத்திருந்தானே!

“சரி, இனி மேற்கொண்டு ஆக வேண்டியதைக் கவனிப்போம். காலையில் சாவிக்கு ஏற்பாடு பண்ணலாம், எது வேண்டுமானாலும் நடக்கட்டும். நான் அஞ்சப் போவதில்லை” என்றான் ராஜு.

“இப்படி அஞ்சாமல் இரவைத் தெருவிலேயே கழிக்க முடியாது. யார் வீட்டுக்காவது



போக வேண்டும். இன்றைக்கு யார் முகத்தில் விழித்தேனோ தெரியவில்லையே!'' என்று பிரலாபித்தாள் சுந்தரி.

"ஒருவேளை எழுந்தவுடன் கண்ணாடியைப் பார்த்துக் கொண்டாயோ!'' என்றான்.

"ஆமாம், இந்தச் சமயத்தில் கூடவா பரிகாசம்! நன்றாயிருக்கிறது, போங்கள்!''

"சரி, நம்ம கிச்சு வீட்டிற்குப் போகலாமா! அவன்தான் உன் மாமா பிள்ளை!''

"ஊஹூம். இருக்கிறதுஇப்பதான் அவனுக்கு ஓர் குழந்தை பிறந்திருக்கிறது. வெறும் கையோடே அவன் வீட்டிற்குப் போகக் கூடாது. போனால் குழந்தை கையில் ஒரு ரூபாயாவது கொடுக்க வேண்டும். இல்லாத போனால் வித்தியாசமாக நினைத்துக் கொள்வார்கள்'' என்றாள்.

கடைசியாக ராஜு ஒருவாறு அப்பாஜி தெருவிலுள்ள தன் சிநேகிதன் வீட்டிற்குப் போவதென்று முடிவு செய்தான். பிறகு இருவரும் அப்பாஜி தெருவிலுள்ள சாரங்கன் வீட்டுக்குப் போனார்கள். சாரங்கன் வீடு பூட்டியிருந்தது. விசாரித்ததில் சாரங்கன் அவன் சம்சாரத்துடன் சினிமாவுக்குப் போயிருப்பதாயும் சிறிது நேரத்தில் வந்து விடுவார்களென்றும் தெரிய வந்தது.

சுந்தரி காலைப் பிடித்துக் கொண்டு வாசற் படியில் உட்கார்ந்து விட்டாள்.

சற்று நேரத்திற்கெல்லாம் சாரங்கனும் அவன் மனைவியும் வண்டியிலிருந்து இறங்கினர்.

"என்ன ராஜு, அபூர்வமாயிருக்கிறதே! எங்கே இப்படி காற்றடிக்கிறது! நான் என்ன பாக்கியம் செய்தேன், உன்னைத் தம்பதி சமேதராய் வரவேற்பதற்கு! வா, உள்ளே போகலாம்'' என்று ராஜுவை உள்ளே அழைத்துச் சென்றான் சாரங்கன்.

"ரொம்ப நாளாக இவளை உன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வரவேண்டும் என்றுதான் ஆசை. என் சமாசாரம்தான் தெரியுமே உனக்கு! இன்றைக்குத்தான் சற்று ஒழிந்தது—கோவிலுக்கு வந்தோம், அப்படியே உன்னையும் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தோம்'' என்றான் ராஜு.

"சரி, வா, சாப்பிட'' என்றான் சாரங்கன்.

"ஊஹூம்—சாப்பாட்டை முடித்துக்கொண்டுதான் கோவிலுக்குக் கிளம்பினோம்'' என்று ராஜு தட்டிக் கழித்தான்.

குழப்பமே காரணமாகவோ என்னவோ சாரங்கன் அதற்கு மேல் வற்புறுத்தவில்லை.

பெண்கள் இடையே சுந்தரிக்கும் அமோக வரவேற்பு கிடைத்தது. அவளும் சாப்பிட மறுத்துவிட்டாள். சாரங்கன் அத்தனை நாழிகைக்கு மேல் வீட்டுக்குப் போகக் கூடாதென்று தடுத்ததின் பேரில் இருவரும் அன்றிரவை அங்கு கழிக்கத் தீர்மானித்தனர். ராஜுவும் சுந்தரியும் இரவு தூங்கவே இல்லை. ராஜுவுக்கு மாத்திரம் அடிக்கடி 'சாம்பார்' ஞாபகம் வந்து கொண்டிருந்தது.

ஆதவன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த தம்பதிகள் விடியற் காலையில் எழுந்து காப்பி அருந்தி விட்டுப் புறப்பட்டனர். ராஜு தன் பீரோ சாவி கெட்டுப்போய் விட்டதென்றும், ஒரு கொத்துச் சாவி இருந்து கொடுத்தால் சாயந்திரம் திருப்பித் தந்து விடுவதாயும் சொல்லி, சாரங்கனிடமிருந்து ஒரு கொத்துச் சாவியையும் வாங்கிக் கொண்டான்.

சாவி யார் கையிலாவது கிட்டியிருந்து, வீடு கொள்ளை போயிருந்தால், என்ன செய்வதென்று சுந்தரியும், ராஜுவும் பயந்து கொண்டிருந்ததற்கேற்ப வாசற் கதவின் பூட்டு பூட்டப்படாமல் கதவில் தொங்கிக் கொண்டிருந்தது. ராஜுவுக்கு உலகமே சுழல்வது போலிருந்தது. சமாளித்துக் கொண்டு, சுந்தரியை உள்ளே போக வேண்டாமென்று சொல்லிவிட்டு இன்ஸ்பெக்டர் லோகநாதனை அழைத்து வர ஸ்டேஷனுக்கு ஓடினான். சற்று நேரத்திற்கெல்லாம் லோகநாதனும் ராஜுவும் வந்து சேர்ந்தார்கள். லோகநாதன் பூட்டை ஜாக்கிரதையாய்ப் பரிசோதித்து விட்டு மெல்லக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனார். ராஜு கிலியுடன் பின் தொடர்ந்தான். சமையல் உள்ளில் சமைத்து வைத்தது அப்படியே இருந்தது. மெல்ல ராஜுவின் அறைப்பக்கம் தலையை நீட்டினார், மிஸ்டர் லோகநாதன். என்ன ஆச்சரியம்! மேஜையின் மேல் மணிபர்சும், கொத்துச்சாவியும் கேட்பாரற்றுக் கிடந்தன. ராஜு தாவி எடுத்து ஆரவாரம் செய்தான். இன்ஸ்பெக்டர் லோகநாதனுக்கு விஷயம் விளங்கி விட்டது. அவர் குலுங்கக் குலுங்கச் சிரித்தார்.

"சுந்தரி, என்னதான் சினிமாவுக்கு நாழியாகி விட்டாலும், இப்படி சாவியை எடுத்துக் கொள்ளாமலும், பூட்டைப் பூட்டாமலும் வரக்கூடாது. இந்தப் பெண் பிள்ளைகளுக்கே ஒரு அவசரமென்றால் தலைகால் தெரிகிறது இல்லை'' என்றான் ராஜு.

"நீங்களாவது மறக்காமல், நிதானமாய்ப் 'பர்ஸை' எடுத்து வந்திருக்கலாம்'' என்றாள் சுந்தரி கடுகடு.

"சரி, நமக்குள் சண்டை எதற்கு? ரேஷன் சமயத்தில் ஆகாரங்களை வீணாக அடிக்க வேண்டாம். அந்தச் சாம்பாரை மட்டும் கொஞ்சம் சூடு காட்டி வை'' என்றான் ராஜு.

# அதி அற்புத ரகங்கள் !

புகழ் பெற்ற ஸ்விஸ் பாக்டரிகளில் தயாரானது
ஒவ்வொன்றும் 5 வருஷ உத்திரவாத முள்ளவை




5 ஜுவல் க்ரோம் 30/- ரோல்டுகோல்டு 33/-
7 ,, க்ரோம் 35/- உயர் ரகம் 38/-
15 ,, க்ரோம் 44/- ரோல்டுகோல்டு 48/-




5 ஜுவல் க்ரோம் 28/- ரோல்டுகோல்டு 33/-
7 ,, க்ரோம் 33/- உயர் ரகம் 35/-
15 ,, க்ரோம் 42/- ரோல்டுகோல்டு 45/-




முழுவதும் ஜுவல் 19/- உயர் ரகம் 21/-
ரேடியத்துடன் 21/- சென். செகண்டு 23/-
ஸ்பெஷல் உயர்ந்த ரக மெஷின் 27/-




5 ஜுவல் க்ரோம் 26/- ரோல்டு கோல்டு 32/-
7 ,, க்ரோம் 32/- ரோல்டு கோல்டு 36/-
15 ,, க்ரோம் 48/- ரோல்டு கோல்டு 58/-




5 ஜுவல் க்ரோம் 22/- உயர் ரகம் 25/-
5 ,, ரோல்டு கோல்டு 30/- உயர் ரகம் 33/-
15 ,, க்ரோம் 45/- ரோல்டு கோல்டு 55/-

டைம் பீஸ் 20/- உயர் ரகம் 25/-
பாக்கெட் வாட்ச் 12/- உயர் ரகம் 15/-

*தபால் செலவு பிரத்தியேகம். இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு தபால் செலவு இனாம்*

★

**PIONEER WATCH CO.**
**POST BOX No. 11428 - CALCUTTA**

## உத்திரவாதமுள்ள ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் சாமான்கள்

என்றும் பிரகாசமாக இருக்கும்.
என்றும் மங்காது.




ஒவ்வொரு வீட்டுக்கும், ஹோட்டல், ஆஸ்பத்திரி, காண்டீனுக்கும் தேவையான சாமான்களும் உள்ளன.

டாம்பீகமானவை ஆனால் மலிவானவை.
சுகாதாரமானவை — நீடித்துழைப்பவை.

## 52 BOOKS COMBINED INTO ONE GIANT VOLUME




Book Size - 10" X 7" - Stamped in Gold- This Stupendous volume answers hundreds of Every-day questions-Essential knowledge for all the Family - Price is Rs. 21/- plus postage. Order a copy or send As. 0-1-0 for gleaming colourful leaflets describes fully about this WONDER BOOK. Don't delay.

●

**K. L. KANNAPPA MUDALIAR**
**POST BOX NO. 2227 - MADRAS - 2**
and also at Calcutta
**P. B. No. 8920 - CALCUTTA - 13**

## ஹெர்குலஸ் சைகிள்கள் இந்த கடின போட்டிகளில் வெற்றி பெற்றன




அதுவரையில் நடந்தேறிய போட்டிகளுள் உயர்ந்த வெற்றியை அடைவதே ஒரு சைகிளின் திறமையை நிர்ணயிக்கப் போதுமானது. ஐந்து மாதங்களில் அதிகாரபூர்வமாக அங்கீகரிக்கப் பட்ட இருபது மாபெரும் கடின உலகப் போட்டிகளில் ஹெர்குலஸ் சைகிள் ஓட்டுபவர்கள் வெற்றி யடைந்துள்ளனர். இந்த வெற்றிகளிலிருந்து இதுவரை உற்பத்தியான சைகிள்களுள் ஹெர்குலஸ் மிகவும் நம்பகமானது என்பது ருசுவாகின்றது.



# Hercules

# ஹெர்குலஸ்

இன்றைய சைகிள்களில்

மிகவும் சிறந்தது

எல்லா பிரபல வியாபாரிகளிடமும் கிடைக்கும்

THE HERCULES CYCLE & MOTOR CO. LTD., BIRMINGHAM, ENGLAND

EAS/12/36/1

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

"கல்கி" ஆசிரியர் எழுதிய

## பார்த்திபன் கனவு

தமிழ் நாட்டுச் சரித்திரத்தின்
மகோன்னத காலத்தை அற்புத
மாக விளக்குகின்றது

விலை ரூ. 6-8-0

•

கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின்
பெருமையையும் அவர் இந்தியாவுக்கு
ஆற்றி யிருக்கும் அருந் தொண்டையும்

## மகாத்மா காந்தி

என்ற நூலில் வெகு அழகாக
விளக்கி யிருக்கிறார்

•

விலை அணா எட்டு
(தபால் செலவு தனி)

•

சசிதேவி

எழுதிய

## விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0
(தபால் செலவு தனி)

•

கிடைக்குமிடம்

**கல்கி காரியாலயம்**

கீழ்ப்பாக்கம் :: சென்னை

FAS-534

**நவ நாகரீக
பெண்கள் விரும்புவது**



**டி.எஸ்.ஆர்.
கோகுல்
ஹேர் ஆயில்**





**டி.எஸ்.ஆர் & கோ.
கும்பகோணம்.**

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டுகள் :
சுராஜ் ஏஜன்ஸீஸ்
10, ஜானிபாட்சா சாகிப் தெரு, சென்னை-14

கோவை, பாலக்காடு அன்டு நீலகிரிக்கு
சோல் ஏஜண்டுகள் :
B. பாலபட்டாபி செட்டியார்
346, வைசியாள் தெரு - கோயமுத்தூர்

ஸ்டாக்கிஸ்டுகள் :
மெஸர்ஸ். சண்டிகா & கோ.,
முதல் அக்ரஹாரம் சேலம் டவுன்

REGD. No. M. 4392